
மனதைக் கவருங்கள்!
தன்னிகரற்ற
சாரதாஸின்
பட்டுப் புடவை அணிந்து
மனம் கவர்ந்தவனை
கவருங்கள்
சாரதா'ஸ்
தன் பில்டிங்
மவுண்ட் ரோடு,
சென்னை-2
போன்: 87177
N.S.B. ரோடு,
திருச்சி-2
போன்: 7077
S 108

# உங்கள் குழந்தையை இந்தக் கோடையில் வேர்க்குரு எங்கு தாக்கும்?




வேர்க்குரு எங்கு தாக்கினாலும், அதை முறியடிக்க உபயோகியுங்கள் ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடரில் மட்டுமே நிருபணம் பெற்ற மருந்துக் கலவை அடங்கியுள்ளது. அது மூன்று வழிகளில் செயலாற்றுகிறது.

- வியர்வையை உறிஞ்சுகிறது; சருமத் துவாரங்கள் அடைபடுவதைத் தடுக்கிறது.
- பாக்டீரியா கிருமிகள் பெருகுவதைத் தடுக்கிறது.
- சுகமும் குளுமையும் தந்து, உடனடி நிவாரணம் அளிக்கிறது.

ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடரைக் குளித்தவுடனும், படுக்கும் முன்பும் உடம்பின்மீது தாராளமாகத் தூவுங்கள். உடனடியாக வேர்க்குருவைத் தடுக்கத் தாய்மார்கள் நம்பும் மருந்து கலந்த வேர்க்குரு பவுடர் இது ஒன்றுதான்!




சந்தன மணத்திலும் கிடைக்கிறது.

## ஜான்ஸன்ஸ்* ப்ரிக்லி ஹீட் பவுடர் மட்டுமே உடல் எரிச்சலை நிறுத்துகிறது, அரிப்பிலிருந்து நிவாரணமளிக்கிறது உடனடியாக.

Johnson & Johnson*



OBM-4316 TM

# சமையலுக்குப் பெருந்துணை

ஓய்வில்லா தாய்மார்கள் சுவையான சமையல் செய்ய சுலபமான வழி! இந்த 3 பெருந்துணைகளைப் பின்பற்றி, பல்வேறு இன்பமூட்டும் தின்பண்டங்களைத் தயாரித்து மகிழுங்கள்!......




## பிரவுன் & போல்ஸன்
கார்ன்ஃப்ளவர்

கபாப், சமோசா, பட்டீஸ் ஆகியவற்றை அதிமெல்லியதாகவும் மொரமொரப்பாகவும் ஆக்குகின்றது. குழைவான சுவைமிகு சூப், கிரேவி ஆகியவற்றைக் கெட்டியாகத் தயாரிக்க உதவுகிறது.

## பிரவுன் & போல்ஸன்
வெரய்ட்டி
கஸ்டர்டு பவுடர்

6 இனிமையான சுவை வகைகள்! குடும்பத்தினரை மகிழ்விக்க பலூதா, பாயசம், ரபடி ஆகிய பல்வேறு இன்சுவையுள்ள பண்டங்கள் தயாரிக்க சாலச் சிறந்தது.







## ரெக்ஸ்
பேகிங் பவுடர்

கேக், பிஸ்கோத்து, பக்கோடா, பூரி, குலாப் ஜாமூன் ஆகியவற்றை சுவைபட அதிமென்மையாகத் தயாரிக்க உதவுகிறது. சிறிதளவே சிறப்பாகச் செய்து முடிக்கிறது!

உங்கள் சமையல் உன்னதமாய் இருக்க
உயர்ந்த சாமானையே உபயோகியுங்கள்
**பிரவுன் & போல்ஸன்** மற்றும் **ரெக்ஸ்**
தரமுயர்ந்த தயாரிப்புகள்
அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்தோடு
பக்குவப்படுத்தப்பட்டவை—கிடைப்பனவற்றிலேயே சிறந்தவை.

**கார்ன் பிராடக்ட்ஸ் கோ.(இந்தியா) பிரைவேட் லிட்.**
ஸ்ரீநிவாஸ் ஹவுஸ், எச். ஸோமானி மார்க்,
பம்பாய் 400 001.

OBM 3886 TM

# கல்கி

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

ராக்ஷஸ ஆனி 1
ஜூன் 15, 1975




ராஜி-ரோஸி












VOLTAS



# "அதிக இட வசதி, குறைந்த மின்சக்தி செலவு"

என்கிறார் வோல்டாஸ் ஓபல் 160 உபயோகிக்கும் ஒருவர்

1. இந்த வகையிலேயே மிக அதிக இடவசதி உள்ளது.
2. 24% குறைவான மின்சக்தி செலவு.
3. 35 நிமிடங்கள் விரைவாக ஐஸ்.
4. 6 குளிர்பானக் குப்பிகளுக்கு 30 நிமிடங்களில் குளுமை தரும் விசேஷ டிரே.

தலைசிறந்த இந்த அம்சங்கள் தவிர... இந்த உன்னத ஃப்ரிஜ்ஜில் உங்கள் நலனை உள்ளத்தில் கொண்டு உருவாக்கப்பட்ட பல அம்சங்கள்—வோல்டாஸுக்கு உங்களை நன்றி சொல்லத் தூண்டும். அவை உங்கள் உள்ளத்தையும் குளிரச் செய்யும்.

வோல்டாஸ் ஓபல்—100 லிட்டர் ஃப்ரிஜும் கிடைக்கிறது






# வோல்டாஸ் ஓபல் 160

## உங்கள் வசதிக்கெனவே உருவான ஃப்ரிஜ்

CMV-126-182 TAM

வோல்டாஸ் லிமிடெட், பம்பாய் • கல்கத்தா • சென்னை • புது டில்லி • பெங்களூர் • லக்னௌ • பாட்னா • அகமதாபாத் • சிகந்தராபாத் • கொச்சி • கான்பூர் • ஜாம்ஷெட்பூர்.

உங்கள் பகுதியில், எங்கள் அதிகாரம் பெற்ற விற்பனையாளர் யாரென அறிய அருகாமையிலுள்ள வோல்டாஸ் அலுவலகத்துடன் தொடர்பு கொள்க.

கல்கி

மலர் 34

இதழ் 46



தமிழ்த்திரு நாட்டைத் தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# முதல்வரின் பிறந்த நாள்

பொன்விழா ஆண்டும் மேலும் இரண்டும் நிரம்பப் பெற்ற முதல்வருக்கு நமது இதயபூர்வமான நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கிறோம். பிறந்த நாளன்று அவர் வீடு நிரம்பி, வாசல் நிரம்பி, வீதி நிரம்பி, அப்பாலும் வழிந்தது அன்பர் கூட்டம். முதல்வருக்கு உள்ள இந்தச் செல்வாக்கை எண்ணி மகிழ்கின்ற நேரத்தில் —

கும்பகோணத்துக்கு முதல்வர் விஜயம் செய்தபோது ஓராயிரம் பேர் அடங்கிய போலீஸ் பட்டாளத்தைப் பக்கத்து மாவட்டத்திலிருந்து தருவித்து அமைதி காக்க வேண்டியிருந்தது என்பதை எண்ணிப் பார்த்து வியக்காமலிருக்க முடியவில்லை.

பிறந்த நாள் வாழ்த்துத் தெரிவிக்க வந்த உடன் பிறப்புக்கள் தாகத்தால் வாடாதிருக்க மோர் வழங்க ஏற்பாடு செய்த முன் யோசனையைப் பாராட்டத் தோன்றுகிற அதே நேரத்தில் —

ஆந்திராவிலிருந்து க்ஷேத்திராடனமாகக் கிளம்பித் தஞ்சைக்கு வந்த ஒருவர், ஐந்து படி அரிசி வைத்திருந்தார் என்பதற்காக உணவு வழங்கு துறை அதிகாரிகளால் துன்புறுத்தப்பட்டு இறந்துவிட்டார் என்பதை அறிந்து வேதனையடையாமலிருக்க முடியவில்லை.

தமிழின் எளிமையையும் எழிலையும் குழைத்துக் கூட்டி மனம் கவரும் விதமாகக் கையாளும் புலமை பெற்ற எழுத்தாளர், கவிஞர், கலைஞர் தமிழகத்தின் முதல்வராக விளங்குகிறார் என்று எண்ணிப் பெருமிதம் கொள்ளும் வேளையில் —

'வள்ளுவரே மூன்றாவது இடத்துக்குத் தள்ளிய காமத்துப் பால் குறள் ஒன்றினைத்தானா தமது குறளோவியத்தின் முதல் ஓவியமாகக் கலைஞர் தேர்ந்தெடுக்க வேண்டும்? நாட்டின் இன்றைய நிலைக்கு மிகவும் அவசியம்தானா?' என்ற கிண்டல் பேச்சையும் கேலிச் சிரிப்பையும் கேட்டு மனம் நோகத்தான் வேண்டியிருக்கிறது.

எந்த ஒரு பிரச்னையையும் சட்டென்று கிரகித்துக்கொண்டு, துரித முடிவெடுத்து, காலதாமதமின்றி உத்தரவுகளைப் பிறப்பிப்பார் என்பதாகப் பாராட்டப்பெற்று, அந்த அளவில் — நிர்வாகத் திறனில் — ஸர் சி. பி. அவர்களுடன் கூட முதல்வரைப் பலர் ஒப்பிட்டுப் பேசும்போது பூரிப்படைகின்ற உள்ளம் —

இதே கழக ஆட்சியில்தானே லஞ்ச ஊழல் முன்னெப்போதும் இல்லாத அளவில் பயங்கரத் தொத்துநோய் போல் பரவியிருக்கிறது என்று எண்ணிச் சோர்வடையவும் செய்கிறது.

சுதந்திரம் பெற்று இத்தனை ஆண்டுகளில் கழக ஆட்சியிலன்றி வேறு எந்த மாநிலத்திலும் இத்தனை சமுதாய நலத் திட்டங்கள் நிறைவேற்றப்படவில்லை. பிச்சைக்காரர், ஊனமுற்றோர், கைம் பெண்கள், கண்ணிழந்தோர், ரிக்ஷா இழுப்போர், குடிசை வாழ்வோர் போன்றவர்களுக்குக் கலைஞர் ஆற்றியுள்ள தொண்டு சொல்லில் அடங்காது. இதைக் கருத்தில் கொண்டு மெய்சிலிர்க்கும் சமயத்தில்—

மேற்படி நற்பணிகளுக்கான நிதி வசூல்களில் அதிகாரிகளுக்கு இலக்குகள் நிர்ணயிக்கப்பட்டு மக்கள் வற்புறுத்தலுக்கு ஆளாகி வதைக்கப்பட்டிருக்கின்றனர் என்பது நினைவு வந்து மனக் கசப்பை ஏற்படுத்துகிறது.

மதுவிலக்கு, குதிரைப் பந்தய ஒழிப்பு, லாட்டரி ஒழிப்பு போன்றவற்றுக்காகக் கலைஞரைத் தலைமீது தூக்கி வைத்துக்கொண்டு கொண்டாடுகிற தருணத்தில் —

இதே கலைஞர்தானே மதுவிலக்கை இடையில் ரத்து செய்து மது பற்றிய சிந்தனையே இல்லாத இளம் தலைமுறையினருக்கு அந்தக் கொடிய பழக்கத்தை ஏற்படுத்தித் தந்தார் என்ற ஞாபகம் வந்து இதயத்தை முறுக்கிப் பிழிகிறது.

தி. மு. க. ஆட்சியில்தான் தமிழக மெங்கும் குக்கிராமங்களுக்கெல்லாம் மின் வசதி பெருகியிருக்கிறது என்று தலைநிமிர்ந்து நிற்கும் சமயத்தில் —


அண்ணன்
இதன் உதவியைவிட அவர் உதவியே மேல்..
தமிழக மக்கள்


இதுதான் காஷ்மீர் ராமாயணம்.
அப்படின்னு சீதைக்கு ராமன் சித்தப்பா தானே?
அப்துல்லா

கடந்த பல ஆண்டுகளாகவே மின் உற்பத்தியில் கவனம் செலுத்தாமல் அலட்சியமாக இருந்து மின்வெட்டுக்கு வழி வகுத்து விட்ட கழக ஆட்சியைக் கண்டிக்கவும் தோன்றுகிறது.

சென்னையில் தண்ணீர்ப் பஞ்சத்தைச் சமாளிக்கக் கடைசி நிமிஷத்தில் அசுர முயற்சிகளை மேற்கொண்டுள்ள கழக ஆட்சியை வாழ்த்த நினைக்கிற வேளையில்-

நீண்ட கால நோக்கில் தண்ணீர் பற்றாக் குறைக்குத் தீர்வு காணும் திட்டங்களைத் துரிதமாக அமுல்படுத்தாமல் காலங் கடத்தியுள்ள ஆட்சி பீடத்தைத் தட்டிக் கேட்கவே வேண்டியிருக்கிறது.

ஆலயங்களின் உபரி நிதியை அனாதைகள் புனர் வாழ்வுக்குப் பயன்படுத்துவதில் தவறென்ன; கருணை இல்லங்கள், அனாதை என்ற சொல்லையே தமிழகத்திலிருந்து விரட்டி அடிக்கட்டும் என்று ஆனந்தப்படுகிற நேரத்தில்—

திராவிடக் கழகத்தினரின் கடவுள் மறுப்பு இயக்கத்துக்கு ஆதரவு தரும் வகையில் நாத்திக மொழிகள் பொதிந்த மேடை அமைத்து, அதன்மீது கொலுவீற்றிருக்கும் திரு ஈ.வெ.ரா. சிலைகளைத் தமிழ்நாட்டின் பல இடங்களில் முதல்வரும், மற்ற அமைச்சர்களும் திறந்து வைப்பதைக் கண்டு வேதனை பிறக்கிறது.

கழக ஆட்சி பற்றி விமர்சித்தால் கல்கி, முதல்வரின் எதிரி எனக் கழகத் தோழர்கள் முடிவுகட்டி விடுவார்களோ எனத் தயங்குகிற தருணத்தில் —

'நட்பு, மிகுதிக்கண் மேற்சென்று இடித்தல் பொருட்டே' என்ற வள்ளுவர் வாக்கு, குறளோவியம் எழுதும் கலைஞருக்குத் தெரியாதது அல்ல என்ற நினைப்புத் தோன்றித் தெம்பு தருகிறது!

# ஆசிய ஜோதிக்கு அஞ்சலி

எம். எஸ். என்ற இரண்டு எழுத்துக்களைக் கூறக் கேட்டாலே லட்சோப லட்சம் பாரத மக்கள் உள்ளத்தில் பக்தி பாவம் தலையெடுக்கிறது, சாந்தி பிறக்கிறது என்றால், எத்தனையோ அரசியல் பிரச்னைகளுக்கிடையில் உழன்ற அண்ணல் காந்தியடிகளுக்கும் அவரது அன்புச் சீடர் ஜவாஹர்லால் நேருவுக்கும் ஸ்ரீமதி எம். எஸ்ஸின் இன்னிசை முழுமையான நிம்மதியை அளித்ததில் வியப்பொன்றுமில்லை. இன்றையப் பிரதமருக்கும் அவ்வாறே எம். எஸ்ஸின் பாட்டில் அளப்பரிய ஈடுபாடு.

நேருஜி அமரத்துவம் அடைந்த மே 27ந் தேதியன்று அவருக்கு அஞ்சலி செலுத்தும் முகமாக ஸ்ரீமதி எம். எஸ். முன்பு போலவே இந்த ஆண்டும் நேருஜி வாழ்ந்த தீன்மூர்த்தி பவன் தோட்டத்தில் பிரார்த்தனை கீதங்கள் இசைக்க வேண்டும் என ஸ்ரீமதி பத்மஜா நாயுடு கோரினார். டாக்டர் கரன் சிங் அவர்களும், சதாசிவம் — எம். எஸ். தம்பதியாரிடம் அவர்கள் தில்லி போயிருந்தபோது நேரில் கேட்டுக் கொண்டார்.

இந்த அழைப்பை ஏற்று ஒப்புதலும் அளித்துவிட்டார் ஸ்ரீ சதாசிவம். ஆனால் இடையில் ஸ்ரீமதி பத்மஜா நாயுடு காலமாகி விடவே ஸ்ரீ சதாசிவத்துக்குச் சிறிது தயக்கம் ஏற்பட்டது. பிரதமருக்கு இவ்விஷயம் தெரிய வந்தபோது உடனே கூறினார்: ''அதனாலேயே தான் ஸ்ரீமதி எம். எஸ். தலைநகருக்கு வந்து பாடியாக வேண்டும். பத்மஜாவின் கோரிக்கை நிறைவேற்றப்பட வேண்டும். என்னுடைய ஆசையும் அதுதான்!''

பிரார்த்தனைக் கூட்டத்துக்கென்றே தயாரான விசேஷ நிகழ்ச்சி நிரலில் மும்மூர்த்திகளின் கீர்த்தனைகள் தவிர, சுவாதித்திருநாள், புரந்தரதாஸர் பாடல்கள், மைசூர் மகாராஜாவின் சாகித்தியம், மீரா பஜன்கள், துளசிதாஸர் பாடல், ஆதிசங்கரரின் ஸ்தோத்திரங்கள், இந்திரா தேவியின் மீரா பாடல், ரவீந்திர சங்கீதம், துகாராமின் மராத்திப் பாடல், குருநானக்கின் ஷபத் முதலியன இடம் பெற்றிருந்தன.

காஞ்சி முனிவர் லோக க்ஷேமத்துக்காக அருளிய பாடலுடன் முடிவுற்ற ஒன்றரை மணி நேரக் கச்சேரியைச் சுமார் ஐயாயிரம் பேர்கள் கேட்டுப் பக்தி வெள்ளத்தில் ஆழ்ந்தனர். டெலிவிஷனில் முழுக் கச்சேரியையும் கண்டு கேட்டு ரசித்தவர்கள் ஏராளம்.

குஜராத் தேர்தல் பிரசாரத்திலிருந்து தாற்காலிகமாக விடுபட்டுத் தலைநகர் வந்து சேர்ந்த பிரதமர் கண்களை மூடி இசை இன்பத்தில் திளைப்பதைப் படத்தில் காணலாம். அவருக்கு வலப்புறத்தில் ஸ்ரீ சதாசிவமும் டாக்டர் கரன் சிங்கும் அமர்ந்திருக்கின்றனர். இடப்புறத்தில் திரு பி. எஸ்.



# என்ன சேதி?

## சிந்தனையாளர் மறைவு

மணிக்கொடி சீனிவாசன் என்று தமிழ் எழுத்தாளர் வட்டாரத்திலும் ஸ்டாலின் சீனிவாசன் என்று விடுதலைப் போராட்ட வீரர்களிடையேயும் குறிப்பிடப்பட்டு வந்தவர் தமது 76வது வயதில் இப்பூத உடலை நீத்தார். பாரத நாடு விரைவில் சுதந்திரம் அடைய வேண்டும் என்று அவருக்கு இளமையில் ஏற்பட்டிருந்த வெறி அவரைப் புரட்சியாளராக்கியது. நாட்டுக் குண்டுகளை ரகசியமாகச் செய்து வெள்ளையர்கள் மீது போட்டு இந்நாட்டை விட்டே பயந்து ஓடச் செய்தாலன்றி நாட்டுக்கு அந்நிய ஆட்சியிலிருந்து விடுதலை இல்லை என்று தீவிரமாக நம்பிச் செயல்பட்டார். இம்முயற்சியில் அன்று அவருக்குத் துணையாக இருந்தவர்கள் திரு உமாசங்கர் தீக்ஷித், அச்சுத் பட்டவர்த்தன், இன்று தமிழக ஆளுநராக இருக்கும் கே. கே. ஷா போன்றவர்கள். விடுதலைப் போராட்டத்தில் காந்திய அஹிம்ஸாப் போராட்ட முறை மேலோங்கவே, அவர்கள் அனைவரும் காந்திய நெறியைப் பின்பற்றினர். ஆயினும் ஸ்டாலின் சீனிவாசன் உள்ளத்தில் கொதித்த தேச பக்திக் கனல் அடங்கவில்லை. ஸதானந்த் அவர்களுடன் சேர்ந்து பம்பாயில் ''ப்ரீபிரஸ் ஜர்னல்'' என்ற தினப் பத்திரிகையைத் தொடங்கினர். ஸ்டாலின் சீனிவாசனின் கனல் தெறிக்கும் தலையங்கங்கள் பிரிட்டிஷாரின் கோபத்தைத் தூண்டி விட்டது. பல முறை பத்திரிகை பறிமுதல் செய்யப்பட்டது.



இப்படிப்பட்ட தீவிர தேசபக்தர், தமிழ் மொழியினிடத்து ஆழ்ந்த காதல் கொண்டார். தமிழ் இலக்கியத்தில் புதிய நடை, புதிய கருத்துக்கள், புதிய உத்திகள் தோன்ற வேண்டும் என்று வ. ரா., டி. எஸ். சொக்கலிங்கம் ஆகியோருடன் சேர்ந்து ''மணிக்கொடி'' என்ற பத்திரிகை தொடங்கினர். அப்பத்திரிகை பல அரிய எழுத்தாளர்களைக் கண்டெடுத்தது. பி. எஸ். ராமையா, பெ. கோ. சுந்தரராஜன், (சிட்டி) புதுமைப்பித்தன் ஆகியோர் அவர்களில் சிலர்.

ஸ்டாலின் சீனிவாசனிடம் அரை மணி நேரம் அளவளாவினால் கருத்துச் செறிந்த பல புத்தகங்களை நுட்பமாகப் படித்த இன்பம் ஏற்படும். அத்தகைய பெரும் சிந்தனையாளரை இழந்து விட்டோம்.

## பரிதாப மரணங்கள்

விஷங் கலந்த கள்ளச் சாராயம் அருந்திச் சென்னையில் பலர் மாண்டுவிட்டனர். மது அரக்கனுக்கு வால் பிடிப்பவர்கள் உடனே, 'பார்த்தீர்களா! இதற்காகத்தான் மதுவிலக்கு கூடாது என்பது' என்று சொல்வார்கள்! ஆனால் இது சரியான வாதம் அல்ல.

மதுவிலக்கை ஏனோ தானோ மனப்பான்மையுடன் அமுல்படுத்தாமல், தீவிரமாக்க வேண்டும் என்பதே நியாயமான கருத்து.

மதுவிலக்கை முதலில் ரத்து செய்து பிறகு மீண்டும் அமுல்படுத்தியதால் இந்த அரசுக்கு இதில் உண்மையான சிரத்தை இல்லை என்ற கருத்து பரவலாக மக்களிடம் மட்டுமின்றி அதிகாரிகளிடமும் நிலவுகிறது. முதல்வர் கண்டிப்புக் காட்டினால் கடைநிலை ஊழியர் வரை கிடுகிடுப்பார். ஆனால் இன்று கள்ளச் சாராய விற்பனை கண்ணடித்தபடி நடந்து வருகிறது. நிலைமை மாற முதல்வர் விரலசைத்தால் போதும்!

---

**ராஜாஜி சிந்தனை**

### கிணற்றுத் தவளை நிலைக்குத் தள்ளப்படுவோம்!

ஹிந்தி திணிப்பின் ஓர் உடன்விளைவாக ஒவ்வொரு மாநிலத்திலும் பிராந்திய மொழியைத் திணிப்பது என்ற நிலை ஏற்பட்டது. இதனால் கல்வித் துறையிலும் ஆட்சித் துறையிலும் புதிய பிரச்னைகள் கிளர்ந்தெழுந்தன. தாய்மொழி மூலம் கல்வி என்ற கருத்து நிர்மாணத் திட்டமாக அமுல்படுத்தப்படாமல் 'ஆங்கிலம் ஒழிக' என்ற கோஷமாக மாறியது.

இதன் பலனாகப் படித்த இளைஞர்கள் வேலை வாய்ப்புக்களை நாடிப் பல்வேறு இடங்களுக்கும் போவது அடியோடு தடுக்கப்படும். பல்கலைக் கழகங்கள் பொய்யான ஒரு பிரதேசப் பற்றினால் ஆட்டுவிக்கப்பட்டு ஒன்றோடொன்று தொடர்பின்றித் தனித்து நிற்கும். ஆங்கிலத்துக்குப் பதில் பிரதேச மொழியைப் போதனா மொழியாக்குவதன் நிகர லாபம் இது.

பல்கலைக் கழக கல்வி இந்தியாவின் அறிஞர்களை ஒன்றிணைத்து வைத்திருந்தது. ஆனால் இப்போது அதற்கு ஆபத்து வந்து விட்டது. இதன் தொடர்பான வேறு பல ஆபத்துக்களையும் அறிஞர் பெருமக்கள் காண்கின்றனர்.

சுயராஜ்யா, செப்டம்பர் 23, 1971

# முருகப்பெருமான்

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்



பௌத்த தத்துவங்களை ஆடியோடத் தம் கரைத்துக் குடித்திருந்த குமாரில பட்டர் மகா மேதையாதலால் சுலபத்தில் பௌத்தர்களை வாதத்தில் ஜெயித்தார்.

'சங்கர பகவத்பாதர்கள்தான் பௌத்த மதத்தை விரட்டினார்' என்று நீங்கள் சரித்திரப் புஸ்தகத்தில் படித்திருக்கிறீர்கள். 'இது தப்பு' என்று அவர் பெயரை வைத்துக் கொண்டிருக்கிற நானே சொல்கிறேன். ஆசாரிய பாஷ்யங்களைப் படித்தவர்கள் ஒப்புக் கொள்வார்கள். அதில் பௌத்த மத கண்டனம் ரொம்பவும் குறைச்சல்தான். பௌத்தர்களை ஏற்கனவே குமாரில பட்டர் அடக்கிவிட்டார். ஆசார்யாள் அதிகம் கண்டனம் செய்தது, வைதிகத்தையே சேர்ந்த இந்த மீமாம்ஸகர்களையும், இன்னொரு வைதிகமதமான சாங்கியத்தையும்தான். இவற்றில் நூற்றிலொரு பங்குதான் பௌத்த மத கண்டனம் இருக்கும்.

இதென்ன? குமாரில பட்டர் சுப்பிரமண்யரின் அவதாரம், அவரே நம் ஆசார்யாளுக்கு விரோதமான பௌத்தத்தைக் கண்டனம் பண்ணிவிட்டார் என்று சொல்லிவிட்டு, இப்போது ஆசார்யாளோ பட்டர் மதத்தையே கண்டித்தார் என்றால் இது குழப்பமாயிருக்கலாம். அப்படியானால், ஆசாரியாளின் மதத்துக்கு வேத கர்மா இல்லாத பௌத்தம் விரோதமா, வேத கர்மா மட்டுமே உள்ள மீமாம்ஸை விரோதமா என்றால், இரண்டுமே விரோதம் இல்லை. அத்வைதத்துக்கு எதுவுமே விரோதம் இல்லை. சகல சித்தாந்தங்களுமே அதற்குள் அடக்கம். படிப்படியாக கர்மம், பக்தி, ஞானம் என்று அது போகும். ஆரம்பத்தில் ஞானமேயில்லாமல் கர்மா செய்தாலும் போதும், முடிவிலே கர்மாவேயில்லாத ஞானம் வந்துவிடும். முதலில் சித்தசுத்திக்குக் கர்மாதான் முக்கியம்; முடிவில் ஞானம்தான் முக்கியம் — அங்கே கர்மா எல்லாம் நின்றுவிடலாம். 'எப்போதுமே — ஆரம்ப நிலையில்கூட — கர்மா வேண்டாம்' என்றதாலேயே பௌத்தத்தை நம் ஆசார்யாள் நிராகரித்தார். 'எப்போதும் கர்மாதான்; ஞானமே வேண்டாம்' என்றதால் மீமாம்சையைக் கண்டித்தார். பக்குவத்தைப் பார்த்து வரிசைப்படுத்தித் தந்தாலோ இரண்டும் விரோதமில்லை என்று அத்வைத சம்பிரதாயத்தை வகுத்துக் கொடுத்தார். இதில் லோக க்ஷேமத்துக்காகவும், சித்தசுத்திக்காகவும் ஏற்பட்ட வேதகர்மாவைப் பௌத்தம் எதிர்க்கிறதே என்பதால் அதனிடம் வாதம் செய்தார். ஆனால் இவர் போட வேண்டிய வாதப் போரைப் பெரும்பாலும் குமாரிலபட்டரே போட்டுப் பௌத்தத்தை ஜயித்து விட்டதால், ஞானத்தில் பூர்த்தி பெறுவதே கர்மாவின் லட்சியம் என்று புரிந்து கொள்ளாமல், கர்மாவையே லட்சியமாக்கிவிட்ட மீமாம்ஸகர்களுடனேயே நம் ஆசார்யாள் முக்கியமாக வாதம் செய்ய வேண்டியிருந்தது.

பரமேசுவரன் நம் ஆசாரியாளாக அவதரிப்பதற்கு முந்தியே குமாரஸ்வாமி அவதாரம் செய்து பௌத்த மத நிராகரணம் செய்து, இவருடைய காரியத்தில் பாதியைச் செய்து விட்டார்!

ஆசாரியாள் காசியில் அத்வைதப் பிரசாரத்தைத் தொடங்கிய போது, குமாரில பட்டரைப் பற்றி ரொம்ப வருத்தம் தருகிற சமாசாரம் கேள்விப்பட்டார் அவர். தம்மைச் சுற்றி உமியைக் கொட்டி அதைக் கருக்கிக் கொண்டு தாமும் அந்த அக்னியில் கொஞ்சம் கொஞ்சமாகக் கருகிப் பிராணத்தியாகம் செய்து கொள்கிறார் என்று ஆசார்யாள் கேள்விப்பட்டார். இதற்குத் 'துஷாக்னிப் பிரவேசம்' என்று பெயர். பட்டர் காலமாவதற்குள் அவர் கர்மமீமாம்ஸையை விட்டு அத்வைதத்தை ஏற்கும்படி செய்ய வேண்டும் என்று ஆசாரியாள் துடித்தார். அவர் ஒருத்தர் ஏற்றால் கர்ம மார்க்கக்காரர்கள் எல்லாரும் அத்வைதத்துக்கு வந்துவிடுவார்கள். எனவே விறுவிறு என்று பிரயாகைக்கு விரைந்தார்.

குமாரஸ்வாமியின் அவதாரமான பட்டர் ஏன் இப்படிக் கோரமான முறையில் ஜீவனைப் போக்கிக் கொள்ள வேண்டும் என்றால், மநுஷ்யன் மாதிரி செய்த காரியங்களில் தர்மசங்கடமான ஒன்றைச் செய்து விட்டால், அதற்காகத் தண்டனையும் பெற்றேயாக வேண்டும் என்று அவர் தாமாகத் தீர்மானித்ததுதான்! 'பௌத்தர்களை ஏமாற்றினேனே, பௌத்த குருமார்களுக்குத் துரோகம் செய்தேனே! கர்மா, அதன் பலன் இதையே பெரிதாகச் சொல்லும் நான் இந்தப் பாப கர்மாவுக்கான தண்டனையை, அல்லது பிராயச்சித்தத்தைச் செய்து கொள்ளத்தானே வேண்டும்?' என்று தம்மையே கேட்டுக் கொண்டார். பிராயச்சித்தம் என்ன என்று தர்ம சாஸ்திரங்களைத் தேடினார். சித்திரவதைதான் குருத்ரோகத்துக்குப் பரிகாரம் என்று அவற்றில் இருந்தது. அதைப் பார்த்துத்தான், உமிக் காந்தலில் இம்மி இம்மியாக வறுபட்டுச் சாவதை விடப் பெரிய சித்திரவதை இருக்க முடியாதாகையால் இந்த மகா கொடிய தண்டனையை விதித்துக் கொண்டு, நெருப்பிலே இறங்கினார். நாமாக இருந்தால் இப்படிப் பிராயச்சித்தம் செய்கிற புஸ்தகம் யார் கண்ணிலும் படக்கூடாது என்று அதைத்தான் நெருப்பில் போடுவோம்! அவரோ, 'எப்படியோ பிராயச்சித்தம் கிடைத்ததே' என்று சந்தோஷப்பட்டுத் துஷாக்னிப் பிரவேசம் செய்தார்.

இந்தச் சந்தர்ப்பத்தில்தான் நம் ஆசார்யாள் அவரிடம் ஓடோடி வந்தார்.

(தொடரும்)

1932-ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது.

# நஷ்ட ஈடு



வெளுத்த தாளின் நடுப் பகுதியில் சிவப்புப் பென்சிலினால் அடிக் கோடிட்டுக் கொண்டிருந்த வடிவேலன் தமது மேஜையின் மேல் நிழல் படிவதைக் கண்டார். தலையை நிமிர்த்தாமலே இடது கையினால் எதிரே வந்தவரை அமரும்படி சமிக்ஞை செய்தார். கையெழுத்துப் பிரதியின் அடுத்த பக்கத்தையும் திருப்பி உன்னிப்பாகப் படித்தார்.

ஐந்து நிமிஷங்களுக்குப் பிறகு எதிரே உட்கார்ந்திருந்த உதவி ஆசிரியரை ஏறிட்டுப் பார்த்தார். அவர் தமக்கு முன்னால் வைத்திருந்த கடிதத்தை வடிவேலனுக்குச் சுட்டிக் காட்டினார்.

''யக்ஞ நாராயணனுடையதுதானே? அதை நான் படித்து விட்டுத்தான் உங்களிடம் அனுப்பினேன்!'' என்று அமைதியாகக் கூறினார் வடிவேலன்.

''அவருக்கு ஏதாவது பதில் எழுத வேண்டுமா?'' பணிவுடன் வினவினார் உதவி ஆசிரியர் தணிகாசலம்.

''அவருடைய கையெழுத்துப் பிரதி பத்திரமாக இருக்கிறதல்லவா? அதை எடுத்து வாருங்கள்.''

வில் வைத்த கதவு ஓசையின்றித் திறந்து மூடிக்கொண்டது.

உதவி ஆசிரியர் கொண்டுவந்த கையெழுத்துப் பிரதியை ஏறிட்டுப் பார்த்தார் வடிவேலன். ''நீங்கள் இதைப் படித்து விட்டீர்கள் என்று நினைக்கிறேன்!''

''ஓ. என்றாலும் இதை நடுவர்களிடம் அனுப்ப வேண்டாம் என்று நீங்கள் உறுதியாகக் கூறிவிட்டீர்கள். முதல் மூன்று பரிசுகள் பெறவேண்டிய கதைகள் குறித்து நடுவர்களும் தமது முடிவைத் தெரிவித்தாயிற்று. பிரசுரத்துக்கு ஏற்றுக்கொண்ட பத்துக் கதைகளில் ஒன்றாகக் கூட நமது ஆசிரியக் குழு இதைத் தேர்ந்தெடுக்க....''

வடிவேலன் கையை உயர்த்தினார். ''தனிநாயகம், நீங்கள் இக்கதையின் ஆசிரியரைச் சந்தித்ததுண்டா?''

'இல்லை' என்று தலையை அசைத்தார் உதவி ஆசிரியர்.

''தமிழ் மொழியில் எழுதுபவர்களில் மிகச் சிறந்தவர்கள் என்று இருபது பேரைத் தேர்ந்தெடுத்தோமானால் அதில் இவர் பெயர் கட்டாயம் இருக்கும். புத்த, சமண, சைவ, வைணவ நூல்கள் அனைத்தையும் இவர் ஆராய்ந்திருக்கிறார். இஸ்லாமியர்கள் தமிழ் மொழிக்குச் செய்த தொண்டைக் குறித்து அற்புதமான நூல் ஒன்று எழுதியுள்ளார்!''

தனிநாயகம் தலையைச் சொறிந்துகொண்டார். ''இப்போது ஞாபகம் வருகிறது. தங்கசாலை மேல் மாடியில் இலக்கிய அன்பர்கள் கூட்டத்தில் இவர் பேசியதை நான் கேட்டிருக்கிறேன். குலசேகர ஆழ்வாரின் முகுந்த மாலையையும், மௌலானா ரூமியின் மஸ்னவியையும் ஒப்பிட்டு அன்று உரையாற்றினார். அடடா! எத்தகைய ஆழமும் பரப்பும் கொண்ட அறிவாற்றல்! தாயுமானவர், இராமலிங்கர், இடைக்காட்டுச் சித்தர் அனைவரும் அங்கு உருவெடுத்து வந்து உலாவினார்கள். ஆனால் அன்றையக் கூட்டத்துக்கு வந்திருந்தவர்கள் ஐம்பது பேர்களே!''

தனிநாயகத்தின் உணர்ச்சி மிக்க விழிகளையும், அவருடைய முன்கை ரோமங்கள் குத்திட்டு நிற்பதையும் மகிழ்ச்சியுடன் பார்த்தார் வடிவேலன். ''ரூமி மட்டுமென்ன தனிநாயகம்! காண்ட், ஹெஸ்ஸே, கிப்ரான் ஆகியவர்களை வேமன்னா, பர்த்ருஹரி, ராஹுல் சாங்க்ருத்யாயன் ஆகியோருடன் இணைத்து அவர் உரையாற்றியதை நான் கேட்டதுண்டு. தத்துவப் பாடத்தில் மாநிலத்திலேயே முதல் மார்க்கு வாங்கியிருக்கிறேன். இருபத்திரண்டு ஆண்டுகளாகப் பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டுள்ளேன். என்றாலும் இவருடைய அறிவுக்கு முன்னால் நான் சித்திரக் குள்ளனைப் போல. அவரை நிமிர்ந்து பார்த்துப் பேசக்கூட எனக்குத் தைரியம் கிடையாது.''

''அவருடைய நூல்கள் அதிகம் விற்கவே காணோம்.''

''அங்கே நிலவும் உள்விவரம் நமக்குத் தெரியாதா? ஒரு பிரபலமான பிரசுர நிறுவனம் ஒட்டு மொத்தமாக இவருடைய நூல் பிரதிகளையெல்லாம் விலை பேசிக்கொண்டு, அனைத்தையும் புனைபெயரில் பிரசுரித்து வருகிறது. இவர் உள்ளங்கால் வெள்ளெலும்பு தேயப் பாண்டி பஜாருக்கு நடக்கிறார். ஒரு காசுகூடப் பெயர்வதில்லை.''

''உங்களுக்கு அவரை நெருக்கத்தில் தெரியும் என்று எண்ணுகிறேன். என் ஊகம் சரிதானா?''

வடிவேலன் நெடுமூச்செறிந்தார். ''அவருடைய துயரங்கள் எல்லாமும் எனக்குத் தெரியும். மனைவிக்குத் தீராத வியாதி.




ஒரே மகள் கைம் பெண்ணாகிக் குழந்தையுடன் வீடு திரும்பி விட்டாள். இரண்டு பிள்ளைகளும் பஸ் விபத்து ஒன்றில் சிக்கி...'' வடிவேலன் கண்களைத் துடைத்துக் கொண்டார்.

இதே உணர்ச்சி உதவி ஆசிரியரின் முகத்திலும் பிரதிபலித்தது.

ஆசிரியர் தொடர்ந்து பேசினார்: ''ஆறு மாதங்களுக்கு முன்னால் அவருடன் உரையாடிக் கொண்டிருந்தேன். 'இவ்வளவு துயரங்களினிடையிலும் நீங்கள் மனம் தளராமல் இருப்பது எங்களுக்கெல்லாம் பெரிய தைரியம்' என்று பரிவுடன் கூறினேன். அவருடைய மறுமொழி எனக்குப் பிரமிப்பை ஊட்டிற்று.''

''...நமது இலக்கியங்களுக்கெல்லாம் பிதாமகர் வியாசர். அவருக்கே ஒரு பெரிய ஐயப்பாடு. அதைப் பீஷ்மரின் மூலம் அவர் தெரிவிக்கிறார்...''

வடிவேலன் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

''இறைவனின் நடமாடும் உருவம் என்று ஏற்றுக் கொள்ளப்பட்ட கண்ணன் காட்டிய வழியிலேயே நடந்த பாண்டவர்கள் ஏன் இத்தகைய துயரங்களுக்கு உள்ளானார்கள் என்று கேட்டு, தமது மரணப் படுக்கையில் கதறினாராம் பீஷ்மர்! இந்த நிகழ்ச்சியை உணர்ச்சிப் பெருக்குடன் என்னிடம் விவரித்தார் யக்ஞம். என்னால் ஒன்றும் பேச இயலவில்லை.''

''நான் உங்களை ஒன்று கேட்கலாமா, ஐயா?''

''சொல்லுங்கள், தனிநாயகம்!''

''தவறாக எண்ணாதீர்கள். இந்த யக்ஞ நாராயணன் இவ்வளவு உயர்ந்த மனிதர், சிறந்த இலக்கியகர்த்தா என்று தெரிந்தும் அவருடைய கதையை நடுவர்களுக்குக்கூட அனுப்ப வேண்டாம் என்று ஏன் தடுத்தீர்கள்? ஐயாயிரம் ரூபாய் என்பது மிகப் பெரிய தொகை. இரண்டாவது பரிசானாலும் அவருக்குப் பெரிய உதவியாக இருந்திராதா?''

விரக்தி விரவிய முறுவல் நெளிந்தது வடிவேலனின் முகத்தில். ''நீங்கள் இந்தக் கதையைத் தேர்வு நோக்கத்துடன் படித்தீர்களா?''

'இலக்கணம் மீறிய உரைநடை.' என்ற அந்தச் சிறுகதையைத் தம் கையில் எடுத்துப் பார்த்தார் தனிநாயகம்.

''படித்தேன் ஐயா!''

''கதையைப் பற்றிய உங்கள் கருத்தை முக பாவத்திலிருந்தே அனுமானிக்க முடிந்தது தனிநாயகம். நாம் இலக்கிய வாணி

ஆதாரம்:

''பாபுலர் மெகானிக்ஸ்''



டெலிஃபோன் மணி அடிக்கிறது. ஃபோனை எடுக்கிறோம். யாரோ பெயர் தெரியாத நபர் கீழ்த்தரமான வார்த்தைகளால் ஏசுகிறார். அல்லது ஒரு குழந்தை அபகரித்துப் போகப்படுகிறது. பணயத் தொகை கேட்டுப் போனில் செய்தி வருகிறது. இத்தகைய சமூக விரோதிகளைப் பிடிக்கப் போலிசார் மிகவும் பிரயத்தனப்பட வேண்டியிருக்கிறது. இந்தத் தொல்லைகளுக்கு முற்றுப்புள்ளி வைக்கும் வகையில் லாஸ் ஏஞ்சல்ஸ் நகரில் ஒரு கம்பெனி ஒரு புதிய எலெக்ட்ரானிக் சாதனத்தை விற்பனைக்கு அறிமுகப்படுத்தியிருக்கிறது. இதனை டெலிபோனுடன் இணைத்துவிட்டால் போதும். ரிசிவரை எடுத்தவுடன் நாம் எந்த எண்ணுடன் தொடர்பு கொண்டிருக்கிறோம் என்பது இந்தச் சாதனத்தில் தெரிகிறது.




நகவல்:

எஸ். எஸ். கே. மொஹிதீன்

பம் செய்கிறோம். நமது ஏட்டின் அட்டைப் படத்தில் ஒரு சிலந்தியின் படத்தைப் பிரசுரித்தாலும் அது பெண் சிலந்தியுடையதாகத்தான் இருக்கும் என்று நமது வாசகர்கள் கூறுகிறார்கள். அருளானந்த அடிகளின் புகைப் படத்தைப் பல கோணங்களில் போட்டு அவருடைய பேருரைகளை வெளியிடுகிறோம். சிந்தனையைத் தூண்டும் அரசியல் தலையங்கங்களை எழுதுகிறோம். விறுவிறுப்பான கேலிச் சித்திரம், சினிமா விமரிசனம் — ஆனால் இவைகளுக்காக மட்டும் மக்கள் நமது பத்திரிகையை வாங்கவில்லை. — நான் கூறுவது...''

''புரிகிறது ஐயா!''

''...படிப்பவர்களின் நரம்பைச் சுண்டி இழுத்து ராஜ கருவிகளில் வெப்பமுண்டாக்கும் வகையிலுள்ள கதைகளைத் தேர்ந்தெடுத்து அதற்கேற்ற படங்களை வரைந்து..''

''தெரிகிறது ஐயா!''

''ஃபிஜி, மோரிஷஸ் தீவுகள் உட்பட உலகத்தில் எங்கெல்லாம் தமிழர்கள் வாழ்கிறார்களோ, அங்கெல்லாம் நமது பத்திரிகை விற்பனை ஆகிறது. பள்ளிச் சிறுமியிலிருந்து பல்லுப் போன கிழவர் வரை இதைப் படிக்கிறார்கள். சிலர் ரகசியமாகவும் படிக்கிறார்கள். நமக்குக் கதை எழுதுகிறவர்களும், அவர்கள் எந்த நிலையில் இருந்தாலும் நம்முடைய தரத்துக்குத் தக்கவாறு தம்மை மாற்றிக்கொள்ளுகிறார்கள்!''

''விளங்குகிறது ஐயா!''

''அத்தகைய பத்திரிகையின் சிறு கதைப் போட்டி என்றால் அதில் பரிசு பெற வேண்டிய எழுத்துக்கள் எப்படி இருக்க வேண்டும் என்பது குறித்த தீர்மானமும் எழுத்தாளர்களுக்கு இருக்கிறது.''

''தெளிவாகிறது ஐயா!''

''இமயத்தளவு உயர்ந்த இலக்கியகர்த்தாவான யக்ஞநாராயணன் பொருள் தேவையினால் உந்தப்பட்டு, நளாயினியும், அனுசூயையும் தடம் புரண்டது போல்...'' வடிவேலன் தலையைக் குனிந்து கொண்டு கைக்குட்டையினால் தம் முகத்தை அழுந்தத் துடைத்தார்.

''நீங்கள் செய்வது எதுவுமே முன்யோசனையுடன்தான் இருக்கும் என்று எனக்குத் தெரியும் ஐயா!'' தனிநாயகம் இருக்கையை விட்டு எழுந்து திரும்பி நடந்தார்.

''தனிநாயகம்!'' தலைமை ஆசிரியர் அவரை விளித்தார்.

நாயகம் திரும்பி வந்தார். வடிவேலன் தமது மேஜையின் இழுப்பறையைத் திறந்து ஓர் உறையை எடுத்து அவரிடம் கொடுத்தார். ''இதைப் படித்த பிறகு இந்தக் கடிதத்தைப் பதிவுத் தபாலில் அனுப்பி வையுங்கள்!'' அவர் சென்ற பிறகு யக்ஞ நாராயணன் அனுப்பியிருந்த சிறுகதையின் பிரதியை எடுத்துத் துண்டு துண்டாகக் கிழித்து மேஜை அடியிலிருந்த கூடையில் வீசினார் வடிவேலன்.

தமது இருக்கைக்குச் சென்று ஆசிரியரின் கடிதத்தைப் பிரித்துப் படித்தார் தனிநாயகம்.

''அன்புமிக்க யக்ஞநாராயணன் அவர்களுக்கு வணக்கம். தாங்கள் அனுப்பியதாகக் குறிப்பிட்ட 'இலக்கணம் மீறிய உரைநடை' என்னும் கதை எங்களுக்குக் கிடைத்தது. அதைத் தவறுதலாக எங்கோ வைத்துவிட்டோம். அந்தக் கதை நடுவர்களின் பார்வைக்கு அனுப்பப்பட்டிருந்தால் அதற்குத்தான் முதல் பரிசு கிடைத்திருக்குமென்பது என் உறுதியான நம்பிக்கை. கதையின் நகலும் தங்களிடம் இராதென்றே நான் எண்ணுகிறேன். உங்களுக்கு ஏற்பட்ட இழப்பை ஈடுசெய்ய முதல் பரிசுக்குச் சமமான தொகையை இதனுடன் அனுப்பியுள்ளேன். தவறு நிகழ்ந்தது குறித்து மிகவும் வருந்துகிறேன்.''

கடிதத்தையும் காசோலையையும் உறையிலிட்டு மூடியபோது தம்மையறியாமலேயே நெஞ்சு பொங்கி வந்ததைத் தனிநாயகத்தினால் உணர முடிந்தது.

# பாரத் ஓவர்ஸீஸ் பாங்கில் உங்கள் டிபாசிட்டுகளுக்கு அதிகப்படி வட்டி கிடைக்கிறது




சதவிகிதம் கூடுதலான வட்டி
5 வருடங்கள் வரையிலுள்ள
டெர்ம் டிபாஸிட்டுகளுக்கு




சதவிகிதம் கூடுதலான வட்டி
சேமிப்பு கணக்குகளுக்கு

கீழ்கண்ட அட்டவணையை கவனமாகப் படியுங்கள்:

| | |
|---|---|
| சேமிப்புக் கணக்குகள் | 5½% |
| **டெர்ம் டிபாஸிட்டுகள்** | |
| 14 நாட்கள் வரை | வட்டி இல்லை |
| 15 நாட்கள் முதல் 45 நாட்கள் வரையான டிபாஸிட்டுகளுக்கு | 3¼% |
| 46 நாட்கள் முதல் 90 நாட்கள் வரையான டிபாஸிட்டுகளுக்கு | 3¾% |
| 91 நாட்கள் மற்றும் அதற்கு மேல், ஆனால் 6 மாதங்களுக்குக் குறைவான டிபாஸிட்டுகளுக்கு | 5¼% |
| 6 மாதங்கள் மற்றும் அதற்கு மேல், ஆனால் 9 மாதங்களுக்குக் குறைவான டிபாஸிட்டுகளுக்கு | 6¼% |
| 9 மாதங்கள் மற்றும் அதற்கு மேல், ஆனால் 1 வருடத்துக்கு குறைவான டிபாஸிட்டுகளுக்கு | 7¼% |
| 1 வருடம், மற்றும் அதற்கு மேல் ஆனால் 3 வருடத்துக்குக் குறைவான டிபாஸிட்டுகளுக்கு | 8¼% |
| 3 வருடம் மற்றும் அதற்கு மேல் ஆனால் 5 வருடம் (உட்பட) வரையான காலத்துக்குரிய டிபாஸிட்டுகளுக்கு | 9¼% |
| 5 வருடங்களுக்கு மேற்பட்ட டிபாஸிட்டுகளுக்கு | 10% |

ரெகெரிங் டிபாசிட்டுகளுக்கும் தக்கபடி அதிக வட்டி அளிக்கின்றன.

எங்கள் பாங்குக்கு விஜயம் செய்யுங்கள் —
எங்களது அன்பார்ந்த சேவை உங்களுக்கு திருப்தி அளிக்கும்.



## பாரத் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட்

பதிவு அலுவலகம்: "ஆக்ஸ்ஃபோர்ட் ஹவுஸ்", மவுண்ட் ரோடு, சென்னை-600006

கிளைகள்:

"ஆக்ஸ்ஃபோர்ட் ஹவுஸ்", மவுண்ட் ரோடு, சென்னை-600006 போன்: 812983
19/20, லிங்கி செட்டி தெரு, சென்னை-600001 போன்: 24656
28, D-கன்னுட் ப்ளேஸ், புதுடெல்லி-110001 போன்: 48899
15-A-65, WEA அஜ்மல்கான் ரோடு, கரோல் பாக், புதுடெல்லி-110005
22/26, பாரத் சேம்பர், ராம்பார்ட் ரோ, ஃபோர்ட், பம்பாய்-400001 போன்: 259660, 290299
மற்றும் பாங்காக் (தாய்லந்து)

# இந்தியாவில் தயாரிக்கப்பட்டது அகில உலகுக்காக... உங்களுக்காகவும்.

FRANCE

SPAIN

MW SW

புதிய

## பிரின்ஸ் டீலக்ஸ் 4 இந்தியாவிலேயே அதிக விற்பனையுள்ள டிரான்ஸிஸ்டரின் ஏற்றுமதித் தரமுள்ள மிகச் சிறந்த மாடல்...

புதிய பிரின்ஸைக் கேட்டுப் பார்த்தீர்களா? அகில உலக நிலையங்களைப் பிடிக்கும் இந்த இந்திய போர்ட்டபிள் டிரான்ஸிஸ்டருக்கு வெளி நாடுகளில் ஏன் இவ்வளவு கிராக்கி என்பது புரியும். வெளிநாட்டினர் போற்றும்படி பிரின்ஸ் டிரான்ஸிஸ்டரின் சிறப்புகள் என்ன? நீங்கள் விரும்பும் ஒலியைத் தேர்ந்தெடுக்கவும், ஒலியின் வெவ்வேறு தரங்களைப் பெறவும், விசேஷ ஐ.எஃப். சர்க்கியூட் உள்ளது. கூடவே, நம்பகமான ஸாலிட்-ஸ்டேட் சாதனத்தின் சக்தி, உயர் திறன் படைத்த 10 செ.மீ. ஆழமுள்ள ஸ்பீக்கர். அதிக தடித்த, தூய செப்பு ஏரியல். 700 மி.வா-க்கும் அதிகமான கேட்கும் சக்தி. பாட்டரியின் சக்தி (வோல்டேஜ்) குறைவாக உள்ளபோதும், உரக்க, தெளிவாகக் கேட்க டயோடு. இவை மட்டுமா? இதன் பெயருக்கேற்றபடி அலங்காரமான அழகிய தோற்றம்.

இன்றே பிரின்ஸ் டிரான்ஸிஸ்டர் வாங்கி மகிழுங்கள். உலகெங்கிலுமுள்ள தரமறிந்த நேயர்கள் இதைத்தான் செய்கிறார்கள்.

எதை வாங்கினாலும் சிறந்ததையே வாங்குங்கள்.

## பிலிப்ஸ்




பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

CMPR-318-165 TM

# சிவகாமியின் சபதம்

பதினைந்தாம் அத்தியாயம்

## குலச்சிறையார்

சென்ற அத்தியாயத்தில் கூறியபடி மாமல்ல சக்கரவர்த்தி படையுடன் புறப்பட்டுச் சென்று மூன்று தினங்கள் ஆயின. காஞ்சிமா நகரத்தின் வீதிகள் வழக்கமான கலகலப்பு இல்லாமல் வெறிச்சென்று கிடந்தன. பட்டணமே தூங்கி வழிந்து கொண்டிருந்தது.

வழக்கத்துக்கு மாறான அந்தப் பகல் தூக்கத்தைக் கலைத்துக் கொண்டு காஞ்சி நகர் வீதிகளில் ஒரு ரதம் கடகடவென்ற சப்தத்துடன் அதிவேகமாகப் பிரயாணம் செய்து திருநாவுக்கரசர் மடத்தின் வாசலில் வந்து நின்றது. ரதத்தை ஓட்டி வந்தவன் வேறு யாரும் இல்லை. நம் பழைய நண்பன் கண்ணபிரான்தான்.

ரதத்திலிருந்து நாம் இது வரையில் பார்த்திராத மனிதர் ஒருவர்—இளம் பிராயத்தினர் — இறங்கினார். சிறந்த பண்பாடு, முதிர்ந்த அறிவு, உயர் குடிப் பிறப்பு ஆகியவற்றினால் ஏற்பட்ட களை அவர் முகத்தில் ததும்பியது.

அமரர்

கல்கி

கீழே இறங்கியவரைப் பார்த்துக் கண்ணபிரான், ''ஆம், ஐயா! இது தான் திருநாவுக்கரசரின் திருமடம். அதோ இருக்கும் பல்லக்கு புவன மகா தேவிக்கு உரியது. சக்கரவர்த்தியின் அன்னையார் சுவாமிகளைத் தரிசிக்க வந்திருக்கிறார் போல் தோன்றுகிறது'' என்றான்.

''யார் வந்திருந்த போதிலும் சரி; தாமதிக்க நமக்கு நேரம் இல்லை'' என்று சொல்லிக் கொண்டு அந்தப் புது மனிதர் மடத்துக்குள்ளே நுழைந்தார்.

உள்ளே உண்மையாகவே புவன மகாதேவியார் தமது வளர்ப்புப் பெண்ணாக ஏற்றுக் கொண்ட மங்கையர்க்கரசியுடன் வாகீசப் பெருந்தகையைத் தரிசிப்பதற்காக வந்திருந்தார். சுவாமிகள் வடநாட்டில் தாம் தரிசனம் செய்து வந்த ஸ்தலங்களின் விசேஷங்களைப் பற்றிப் புவன மகாதேவிக்குச் சொல்லிக் கொண்டிருந்தார். எல்லாம் சொல்லிவிட்டுக் கடைசியில் தாம் மீண்டும் தென்னாட்டு யாத்திரை கிளம்பப் போவது பற்றியும் நாவுக்கரசர் தெரிவித்தார்.

''ஆம், தாயே! வடநாட்டில் எத்தனையோ ஸ்தலங்களைத் தரிசனம் செய்தேன். கயிலையங்கிரி வரையில் சென்றிருந்தேன். எனினும், நமது தென்னாட்டிலே உள்ள க்ஷேத்திரங்களின் மகிமை தனியானதுதான். நமது ஏகாம்பர நாதர் ஆலயத்துக்கு இணையான ஆலயம் வேறு எங்கும் இல்லை. நமது திருத்தில்லை, திருவையாறு, திருவானைக்கா முதலிய க்ஷேத்திரங்களுக்கு இணையான க்ஷேத்திரமும் வேறு எங்கும் கிடையாது. மறுபடியும் தென்னாடு சென்று அந்த ஸ்தலங்களையெல்லாம் மீண்டும் தரிசித்துவிட்டு வர எண்ணியிருக்கிறேன். நாளைக்குப் புறப்படப் போகிறேன்!''

இப்படி அவர் சொல்லிக் கொண்டிருந்த போது, மடத்தின் வாசலில் ரதத்திலிருந்து இறங்கிய இளைஞர் உள்ளே வந்தார்.

பயபக்தியுடன் சுவாமிக்கும் புவன மகாதேவிக்கும் வணக்கம் செலுத்தினார்.

''நீ யார் அப்பனே? எங்கு வந்தாய்?'' என்று நாவுக்கரசர் கேட்ட குரலில் சிறிது அதிருப்தி தொனித்தது.

அந்தக் குறிப்பைத் தெரிந்துகொண்ட இளைஞர் கைகூப்பி நின்ற வண்ணம், ''சுவாமி! மன்னிக்க வேண்டும். சக்கரவர்த்தியின் அன்னையார் இவ்விடம் விஜயம் செய்திருப்பது தெரிந்தும் முக்கிய காரியத்தை முன்னிட்டுப் பிரவேசித்தேன். அடியேன் வராக நதிக் கரையிலிருந்து வருகிறேன். அங்கே நெடுமாற பாண்டியர் கடுமையான தாபஜ்வரத்தினால் பிடிக்கப்பட்டிருக்கிறார். வைத்தியர்களின் ஔஷதங்களினால் மட்டும் அவரைக் குணப்படுத்த முடியாதென்று கருதி, தங்களிடமிருந்து திருநீறு வாங்கிக் கொண்டு போக வந்தேன்; மன்னிக்க வேண்டும்'' என்று திருநாவுக்கரசரைப் பார்த்துக் கூறிவிட்டுப் புவன மகாதேவியின் பக்கம் திரும்பி, ''தேவி! தாங்களும் க்ஷமிக்க வேண்டும்!'' என்றான்.

அப்போது தேவி, ''அப்பனே! நீ ரொம்ப விநயம் உள்ளவனாயிருக்கிறாய். ஆனால், சுவாமிகள் முதலில் கேட்ட கேள்விக்கு நீ மறுமொழி சொல்லவில்லையே? நீ யார்?'' என்று கேட்க,



''பதற்றத்தினுல் மறந்துவிட்டேன், தேவி! பாண்டிய நாட்டில் மணமேற்குடி என்னும் கிராமத்தில் பிறந்தவன். என் பெயர் குலச்சிறை; படையுடன் கிளம்பிய பாண்டிய குமாரருக்கு ஓலை எழுதவும் படிக்கவும் உதவியாயிருக்குமாறு என்னை நியமித்து மதுரை மன்னர் அனுப்பி வைத்தார்!'' என்ருன் அந்த இளைஞன்.

''நோய்ப்பட்ட பாண்டிய குமாரரை வராக நதிக் கரையில் ஏன் வைத்திருக்க வேண்டும்?'' என்று தேவி மீண்டும் கேட்டார்.

''ரொம்பக் கடுமையான ஜுரம், தேவி! இந்த நிலையில் அவர் பிரயாணம் செய்யக் கூடாது என்பது வைத்தியரின் அபிப்பிராயம். கொஞ்சம் குணப்பட்டதும் இவ்விடத்துக்கு அழைத்து வந்து விடுகிருேம். அரண்மனைக்கு வந்து செய்தி சொல்லிவிட்டுப்



போக எண்ணினேன். நல்ல வேளையாக இங்கேயே தங்களைச் சந்தித்தேன்.''

''அப்படியில்லை, அப்பா! என்னிடம் சொன்னுல் மட்டும் போதாது. அரண்மனைக்கு வந்து வானமா தேவியிடமும் நேரில் சொல்லி விட்டுத் திரும்பிப் போ! பாவம்! அவள் மிக்க கவலைப்பட்டுக் கொண்டிருக்கிருள்'' என்று புவனமகா தேவி சொல்லிக் கொண்டே எழுந்து, ''சுவாமி! போய் வருகிறேன். விடை கொடுங்கள்!'' என்ருர்.

புவனமகாதேவியுடன் மங்கையர்க்கரசி எழுந்து சென்ருள். குலச்சிறை உள்ளே வந்தது முதல் அவனுடைய முகத்தை அடிக்கடி உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தவள், இப்போது வெளியேறுமுன்னர்க் கடைசி முறையாக ஒரு தடவை பார்த்தாள். அப்போது குலச்சிறையும் அவளைப் பார்க்க நேர்ந்தது. இருவருடைய முகங்களிலும், கண்களிலும் ஏதோ பழைய ஞாபகத்தின் அறிகுறி தோன்றலாயிற்று.

பெண்ணரசிகள் இருவரும் போன பிறகு திருநாவுக்கரசர், ''அப்பனே! எல்லாம் என்னை ஆளும் எம்பெருமான் செயல்! அடியேனுல் நடக்கக்கூடியது என்ன இருக்கிறது? என்ருலும் சிரித்துப் புரமெரித்த இறைவன் பெயரை உச்சரித்து இந்தத் திருநீற்றைக் கொடுக்கிறேன். எடுத்துக் கொண்டு போய் இடுங்கள். அடியேனுக்கு நேர்ந்திருந்த கொடிய சூலைநோயை ஒரு கணத்தில் மாயமாய் மறையச் செய்த வைத்திய நாதப் பெருமான் இளம் பாண்டியரின் நோயையும் குணப்படுத்தட்டும்'' என்ருர்.

நாவுக்கரசர் அளித்த விபூதியைப் பயபக்தியுடன் வாங்கிப் பத்திரப்படுத்திக் கொண்ட குலச்சிறையார், மீண்டும், ''சுவாமி! அடியேனுக்கு இன்னெரு வரம் அருள வேண்டும்'' என்று பணிவுடன் கேட்டார்.

''கேள், தம்பி! உன்னுடைய பக்தி விநயம் என் மனத்தை ரொம்பவும் கவர்கிறது!'' என்ருர் வாகீசர்.

''தென் பாண்டிய நாட்டில் சமணர்களின் ஆதிக்கம் அதிகமாகி வருகிறது. சுவாமிகள் தங்கள் சிஷ்ய கோடிகளுடன் பாண்டிய நாட்டுக்கு விஜயம் செய்ய வேண்டும். விஜயம் செய்து, மக்களைச் சமணர் வலையில் விழாமல் தடுத்தாட்கொள்ள வேண்டும்! தமிழகத்தின் புராதனப் பாண்டிய வம்சத்தையும் சமணப் படுகுழியில் விழாமல் காப்பாற்ற வேண்டும்! ஆஹா! நல்ல மரத்தில் புல்லுருவி பாய்ந்தது போல், இந்தத் தமிழ் நாட்டில் சமணம் ஏன் வந்தது சுவாமி!'' என்று குலச்சிறை ஆவேசத்துடன் பேசி வந்த போது, நாவுக்கரசர் முகத்தில் புன்னகை தவழ்ந்தது. அந்தப் பெருந்தகையார் குலச்சிறையைக் கையமர்த்தி நிறுத்திக் கூறினுர்: ''தம்பி! சமண மதத்தின் மீது ஒரு காலத்தில் நானும் இப்படிக் கோபம் கொண்டிருந்தேன். ஆனுல், இந்தக் காலத்திலே ஒரு சிலர் செய்யும் காரியங்களுக்காகச் சமண சமயத்தின் மேல் துவேஷம் கொள்ளுதல் நியாயமன்று. அன்பையும் ஜீவகாருண்யத்தையும் போதிப்பதற்கு ஏற்பட்ட சமயம் சமண சமயம். நமது செந்தமிழ் நாடு ஆதி காலத்தில் சமண முனிவர்களால் எவ்வளவோ நன்மைகளை அடைந்திருக்கிறது. சமண முனிவர்கள் தமிழ் மொழியை வளர்த்தார்கள். அரிய காவியங்களைத் தமிழில் புனைந்தார்கள். ஓவியக் கலையை நாடெங்கும் பரப்பினுர்கள்.''

# தரத்தின் சிகரத்தில் தன்னிகரற்ற பிரஸ்டீஜ்



## பதினைந்து லட்சத்துக்கும் அதிகமான குடும்பத் தலைவிகள் உபயோகிப்பது பிரஸ்டீஜ்– இந்தியாவில் அதிகம் விற்பனையாகும் பிரஷர்குக்கர் !

பிரஸ்டீஜ் கடந்த 15 ஆண்டுகளாகத் தரத்தின் உயர்வில் தனித்து விளங்குகிறது—நீங்கள் அளிக்கும் அமோக ஆதரவுடன். ஆம், பிரஸ்டீஜ் புகழுடன் விளங்கப் பல காரணங்கள்:

**உங்களுக்கு இரண்டு பெரிய சேமிப்புகள்**

பிரஷர் குக்கர் எதுவானாலும் நேரமும் எரிபொருளும் மிச்சம்தான். ஆனால் பிரஸ்டீஜோ மிக அதிகமான சிக்கனத்தை சாத்தியமாக்குகிறது. அதன் உள்ளே கொள்ளளவு அதிகம். அதனால் அதிக அளவு உணவைச் சமைக்க முடிகிறது. அதிக எரிபொருள் செலவில்லாமலே அதிகம் சமைத்து விடுகிறது. (அதன் தனிப்பட்ட அலுமினிய மூடி வெளிப்புறம் பொருந்துவதால் உள்புறத்தின் கொள்ளளவை விசாலமாக்குகிறது).

**அது துரிதமானது — மேலும் சிக்கனம்**

பிரஸ்டீஜ் தயாரிக்கப் பயன்படும் தனிரக அலுமினிய உலோகக் கலவை உஷ்ணத்தை விரைவாகவும் சமப் பரவலாகவும் பரப்புகிறது. இதனால் நேரமும் எரிபொருளும் இன்னும் மிச்சமாகிறது.

**அதிக பாதுகாப்பிற்கு ஏற்ற தனிரக சாதனங்கள்**

பிரஸ்டீஜ் அளிக்கும் தனிரக பாதுகாப்பு சாதனங்கள்: மூடுவதற்கு இரட்டிப்பு வசதியுள்ள மூடி மற்றும் மூன்று கட்டங்களில் அமைந்துள்ள பிண்டிலுடன் கூடிய ரப்பர்பாதுகாப்பு அடைப்பான்.

பிரஸ்டீஜ் வாழ்நாள் முழுவதும் உழைப்பதற்கு உறுதியளிக்கிறது. அது நீடித்து உழைப்பதற்கு உதவ, நாடு முழுவதும் ஸர்வீஸ் ஸ்டேஷன்கள் பல உள்ளன.

டிடி.(பிரைவேட்) லிமிடெட்
பெங்களூர் 560 016

ஆறு அளவுகளில் கிடைக்கிறது

**Prestige**




**பிரஸ்டீஜ் 15 ஆண்டுகளாக புகழ் உச்சியில்– மேலும் உயர்ந்து வருவது !**




SAA/TTP/1743 TAM

# புதிய அனுபவம், பேரானந்தம்



செஞ்சுரி
பருத்தித் துணிகள்



**செஞ்சுரி** -100% பருத்தித் துணிகள்

தி செஞ்சுரி ஸ்பின். அண்டு மான்யு.
கம். லிமிடெட், பம்பாய்-400 025

ADROIT/925

குலச்சிறை பொறுமை இழந்தவராய், ''போதும், சுவாமி! போதும். தங்களிடம் சமணர்களைப் பற்றிய புகழுரைகளைக் கேட்பேன் என்று நான் எதிர்பார்க்கவில்லை. தொண்டை மண்டலத்தைச் சமணர்களிடமிருந்து காப்பாற்றிய தாங்கள் பாண்டிய நாட்டையும் காப்பாற்றியருள வேண்டும் என்று கேட்டுக் கொள்ள வந்தேன். அவர்கள் செய்யும் அட்டூழியங்களைத் தாங்கள் பாண்டிநாட்டுக்கு வந்து பாருங்கள்!'' என்று பேசினார்.

நாவுக்கரசர் சற்று நேரம் கண்களை மூடியவண்ணம் ஆலோசனையில் இருந்தார். பிறகு கண்களைத் திறந்து குலச்சிறையைப் பார்த்துக் கூறினார்: ''மந்திர தந்திரங்களில் வல்லவர்களான சமணர்களுடன் போராடுவதற்குச் சக்தியோ விருப்பமோ தற்போது என்னிடம் இல்லை. ஆனால் கேள், தம்பி! என்னுடைய அகக் காட்சியில் ஓர் அற்புதத்தை அடிக்கடி கண்டு வருகிறேன். பால் மணம் மாறாத பாலர் ஒருவர் இந்தத் திருநாட்டில் தோன்றி அமிழ்தினும் இனிய தீந்தமிழில் பண்ணமைந்த பாடல்களைப் பொழியப் போகிறார். அவர் மூலமாகப் பல அற்புதங்கள் நிகழப் போகின்றன. பட்ட மரங்கள் தளிர்க்கப் போகின்றன. செம்பு பொன்னாகப் போகின்றது. பாஷாண்டிகள் பக்தர்களாகப் போகிறார்கள். அந்த இளம் பிள்ளையின் மூலமாகவே தென்பாண்டி நாட்டிலும் சமணர்களின் ஆதிக்கம் நீங்கும்; சைவம் தழைக்கும்; சிவனடியார்கள் பல்கிப் பெருகுவார்கள்.''

இவ்விதம் திருநாவுக்கரசர் பெருமான் கூறி வந்த போது குலச்சிறையார் மெய்ம்மறந்து புளகாங்கிதம் அடைந்து நின்றார்.

காஞ்சி பல்லவ சக்கரவர்த்தியின் அரண்மனை மிக மிக விஸ்தாரமானது. அது மூன்று பெரிய பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. மூன்று பகுதிகளின் வெளி வாசலும் அரண்மனையின் முன்புறத்து நிலா முற்றத்தில் வந்து சேர்ந்தன. மூன்று பகுதிகளுக்கும் பின்னால் விசாலமான அரண்மனைப் பூங்காவனம் இருந்தது.

மூன்றுக்கும் நடுநாயகமான பகுதியில் மாமல்ல சக்கரவர்த்தி தம் பட்டமகிஷி வானமா தேவியுடன் வசித்து வந்தார். வலப்புறத்து மாளிகையில் புவனமகாதேவியும் மகேந்திர பல்லவருடைய மற்ற இரு பத்தினிகளும் வசித்தார்கள். இடப்புறத்து மாளிகை, அரண்மனைக்கு வரும் முக்கிய விருந்தாளிகளுக்காக ஏற்பட்டது. அந்த மாளிகையில் தற்சமயம் இலங்கை இளவரசர் தமது மனைவியுடன் வசித்து வந்தார். ஒவ்வொரு மாளிகையை ஒட்டியும் அரண்மனைக் காரியஸ்தர்கள், காவலாளர்கள் முதலியோர் வசிப்பதற்குத் தனித் தனி இடங்கள் அமைக்கப்பட்டிருந்தன.

மூன்று மாளிகைகளையும் ஒன்றோடொன்று இணைத்த மச்சுப் பாதைகளும் சுரங்கப் பாதைகளும் இருந்தன.

சோழன் செம்பியன் மகளைப் புவனமகாதேவி தம் புதல்வியாகக் கருதிப் பாதுகாத்து வருவதாக வாக்களித்திருந்தார் என்று சொன்னோமல்லவா? அந்த வாக்கைப் பரிபூரணமாக நிறைவேற்றி வந்தார். அரண்மனையில் இருந்தாலும், வெளியே கோயில்கள் அல்லது



மடங்களுக்குச் சென்றாலும், மங்கையர்க்கரசியைச் சதா சர்வ காலமும் அவர் தம் பக்கத்திலேயே வைத்துக் கொண்டிருந்தார்.

சரித்திரப் பிரசித்தி பெற்ற மகேந்திர பல்லவரைப் போலவே அவருடைய பட்டமகிஷி புவனமகாதேவியும் சிவ பக்தியில் சிறந்தவர். சக்கரவர்த்தி சிவபதம் அடைந்த பிறகு அவர் தமது காலத்தைப் பெரும்பாலும் சிவ பூஜையிலும் சிவபுராணங்களின் படனத்திலும் கழித்து வந்தார். அவருடைய அரண்மனையில் ஓர் அறையில் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து தினந்தோறும் ஆகம விதிகளின்படி அவர் பூஜை செய்வதுண்டு. இந்தச் சிவபூஜைக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்யும் உரிமையை மங்கையர்க்கரசி வருந்திக் கோரிப் பெற்றிருந்தாள். மேற்படி பணிவிடைகளை மிக்கப் பக்தி சிரத்தையுடன் நிறைவேற்றி வந்தாள். முன்



பின் அறியாதவர்கள் அடங்கிய அந்தப் பிரம்மாண்டமான அரண்மனையில் மங்கையர்க்கரசி பொழுது போக்குவதற்கு அத்தகைய பூஜா கைங்கரியங்கள் சிறந்த சாதனமாயிருந்தன.

மாமல்லர் படையுடன் கிளம்பிச் சென்று மூன்று தினங்கள் வரையில் தான் அவ்விதம் எல்லாம் ஒழுங்காக நடந்தன. நாலாவது நாள் புவன மகாதேவியும் மங்கையர்க்கரசியும் திருநாவுக்கரசரைத் தரிசித்து விட்டு வந்தார்கள் அல்லவா? அன்று முதல் மங்கையர்க்கரசியின் கவனம் சிறிது சிதறிப் போய்விட்டது. தேவியார் சிவ பூஜை செய்ய அமர்ந்த பிறகு, புஷ்பம் வேண்டியபோது சந்தனத்தையும், சந்தனம் வேண்டியபோது தூபத்தையும், தூபம் கேட்டால் பிரசாதத்தையும் மங்கையர்க்கரசி எடுத்துக் கொடுக்கலானாள்.

இதையெல்லாம் கவனித்த புவன மகாதேவி, பூஜை முடிந்த பிறகு, ''குழந்தாய்! இன்றைக்கு என்ன ஒரு மாதிரி சஞ்சலம் அடைந்திருக்கிறாய்? தகப்பனாரை நினைத்துக் கொண்டு கவலைப்படுகிறாயா? என்னைப் பார்த்துக் கொள், குழந்தாய்! என்னுடைய ஏக புதல்வனைப் போர்க்களத்துக்கு அனுப்பி விட்டு நான் நிம்மதியாக இருக்கவில்லையா?'' என்று தைரியம் கூறினார்.

அப்போது மங்கையர்க்கரசி சிறிது நாணத்துடன், ''இல்லை அம்மா! அப்படியெல்லாம் கவலை ஒன்றுமில்லை!'' என்றாள்.

''பின் ஏன் உன் முகத்தில் சிந்தனைக்கு அறிகுறி காணப்படுகிறது? இந்த அரண்மனையில் வசிப்பதில் ஏதாவது உனக்குத் தொந்தரவு இருக்கிறதா?'' என்றார் மகேந்திரரின் மகிஷி.

''தொந்தரவா? இவ்வளவு சௌக்கியமாக நான் என் தந்தையின் வீட்டிலேயே ஒருநாளும் இருந்ததில்லை. என் மனத்திலும் சஞ்சலம் ஒன்றுமில்லை. திருநாவுக்கரசர் பெருமானோடு தாங்கள் வார்த்தையாடிக் கொண்டிருக்கையில் வாலிபர் ஒருவர் வந்தாரல்லவா? அவரை எங்கேயோ ஒரு முறை பார்த்த ஞாபகம் இருந்தது. அதை யொட்டிச் சில பழைய ஞாபகங்கள் வந்தன. வேறொன்றுமில்லை. அம்மா!'' என்று மங்கையர்க்கரசி கூறினாள். (தொடரும்)

# 83 லட்சம் மீட்டவர்!

காஞ்சிபுரம் - வந்தவாசி சாலை. வாயு வேகமாகச் சென்ற ஒரு காரைச் சுங்க அதிகாரி நிறுத்தப் பெரும் பாடு படவேண்டியதாயிற்று. வழிமறித்த போதிலும் நிற்காமல் சென்ற அந்தக் காரை மடக்கச் சுங்க அதிகாரி தம் காரை அசுர வேகத்தில் ஓட்டிச் சென்றார். கடத்தல் காரின் மீது இலேசாக மோதிச் சாலையை விட்டு விலகச் செய்து நிறுத்தினார்! வேகமாக மோதியிருந்தால் இரு கார்களுமே சப்பையாகிப் பயணிகள் உயிரிழக்க நேர்ந்திருக்கும்! இந்த அபாயகரமான மோதலின் விளைவு: விலையுயர்ந்த கிராம்புகள் பறிமுதலாயின. கடத்தல்காரர்கள் பிடிபட்டார்கள்.

சென்னை சுங்க இலாகா சூபரின்டென்ட் திரு எஸ். ராமநாதன் அவர்களின் முப்பதொரு வருஷ உத்யோக வாழ்க்கையில் இப்படி எத்தனை எத்தனையோ அதிசயிக்கத் தக்க நிகழ்ச்சிகள். கடமை வீரர் ராமநாதன் 441 கடத்தல் கேஸ்களைத் துலக்கிச் சர்க்காருக்கு 83 லட்சம் பெறுமானமுள்ள தங்கம், கடிகாரங்கள், அன்னியத் துணிகள் முதலியவற்றைக் கைப்பற்றித் தந்திருக்கிறார். இவருக்கு ஜனாதிபதி விருது - பாராட்டுப் பத்திரம் கிடைத்துள்ளது. தமிழகத்தில் பதினொரு அதிகாரிகள் இத்துறையில் இதுவரை ஜனாதிபதி விருது பெற்றிருக்கிறார்கள்!

-குண்டுமணி



படம்: அப்பப்பா! கடமை வீரர் ராமநாதன். முகத்தில் என்ன கடுமை!

(சென்ற இதழ் தொடர்ச்சி)

ஏரியைச் சூழ்ந்த காடு ஏர்க்காடு ஆயிற்று. சிறிய ஏரிதான். பிறைச் சந்திரன் வடிவில் இருக்கிறது. கொஞ்சம் ஆழப்படுத்தினால், நடுவில் உள்ள குட்டி தீபகற்பத்தைத் தீவாகவே ஆக்கிவிட்டுப் படகில் சுற்றி வர ஏற்பாடு செய்தால், அத்துடன் ஏரியை வலம் வர அழகானதொரு நடைபாதையையும் அமைத்து விட்டால்....

எல்லாவற்றுக்கும் பணம் வேண்டும், சுவாமி! அரசுக்கு மனமும் வேண்டும். இன்று ஏர்க்காடு நகரமோ கடைத்தெருவோ ஏரியோ மனோரம்மியமாகத் தோற்றம் அளிக்கவில்லை. ஆனால் இவற்றை விட்டுச் சென்றால், ஒரு மைல் இரண்டு மைல் என்று பல திக்குகளில் போனால் அதியற்புதமான இயற்கைத் தோற்றங்களைப் பார்த்து மெய் சிலிர்க்கலாம். காலையில் உலாவித் திரும்பியதும் சிற்றுண்டி அருந்தக் கூடாது. இட்டிலி, தோசை, வடை, சாம்பார், சட்னி எல்லாவற்றையும் டிபன் காரியரில் நிரப்பிக்கொண்டு மீண்டும் புறப்பட்டுவிட வேண்டும். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு திக்கில் ஒன்றரை மைல் இரண்டு மைல் தள்ளிப் போய் மலைகளும் பள்ளத்தாக்குகளும் தென்படும் ஓர் எழிலார்ந்த சூழலைத் தேர்ந்தெடுக்க வேண்டும். மரத்தின் நிழலை நாட வேண்டும். இதற்குள் பசி பிய்த்துக் கொண்டு போகுமாதலால் டிபன் காரியரிலிருந்தவையெல்லாம் உங்கள் குடும்பத்தினரின் வயிற்றுக்குள் விடுவிடுவென்று மாயமாய் மறையும் — குரங்குகளிடம் மொளுமல் இருந்தால்! பிறகு பாக்கெட்டிலிருந்து சீட்டுக் கட்டை எடுத்துவிட வேண்டியதுதான். அல்லது பிடித்தமான ஒரு நாவலைப் பிரிக்கலாம். பாடத் தெரிந்தவர்கள் (தெரிந்தவர்கள் மட்டுமே) பாடலாம். ஏர்க்காடை அனுபவிக்க இதுவே சிறந்த வழி.

சேர்வராயன் மலைகளின் அதிகப்படி உயரம் 5300 அடி. ஏர்க்காடு 4600 அடி உயரத்தில் அமைந்திருக்கிறது. எனவே, கம்பளி ஆடைகள் தேவையில்லை. இரவிலும் காலை மாலை நேரங்களிலும் குளுகுளு என்று இருக்கும். பகலில் வெய்யிலானாலும் வேர்க்காது. ஆனால் சதா நிழலை நாடியே சுகிக்க வேண்டும். மாலை நேரத்தில் உலாவச் சென்றால் குடையொன்றைச் சுருட்டி வாக்கிங் ஸ்டிக் போல் வைத்திருப்பது நல்லது. திடீர் மழை சகஜம்.

ஏர்க்காட்டில் சுற்றிப் பார்க்க வேண்டிய இடங்கள் நிறைய உள்ளன. ஆனால் அங்கெல்லாம் செல்வதற்குரிய சாலைகள் இருப்பதாகக் கூற முடியாது. பாதைகளை நன்கு சமைப்பதுடன் இன்னின்ன இடத்துக்குப் போகும் வழி என்று அறிவிப்புக் கம்பங்களும் நட வேண்டும். அத்துடன் அந்தந்த இடத்தின் விசேஷம் அந்த இடத்தில் இருக்குமாறு பார்த்துக் கொள்வதும் நல்லது!

உதாரணமாக நாங்கள் ஏரோப்ளேன் ஓடைக்குப் போகத் தீர்மானித்தோம். பாதி தூரத்துக்கு மேல் ஒற்றையடிப் பாதை என்று தெரிய வந்தது. அதற்குத் துணிந்து, ''அங்கு ஓடை இருக்கிறதா?'' என்றோம். ''இல்லை'' என்றார்கள். வற்றி விட்டதாம்! ''சரி, ஓடைதான் இல்லை, ஏரோப்ளேனாவது இருக்கிறதா ?'' என்று விசாரித்தோம். அதுவும் இல்லை எனத் தெரிய வந்தது! என்றாலும் சளைக்காமல் விடாப்பிடியாக மலைச் சரிவில், கிடுகிடு பள்ளத்தாக்கில் இறங்கிப் போனோம். எதையும் பார்க்காத மன நிறைவோடு கால் வலிக்க வலிக்க மீண்டும் ஏறி வந்தோம்!





கி. ராஜேந்திரன்

முதல் நாளன்று கமலஹாஸன்... கடைசி தினத்தன்று ஜெய்சங்கர்!

சேலத்திலிருந்து பத்தொன்பதே மைல் தூரத்தில் உள்ளது ஏர்க்காடு

இதே போல், ''கிள்ளியூர் அருவியில் அருவி கொட்டுகிறதா ?'' என்று விசாரித்த போது, ''அருவியா ? அது ஒண்ணுமில்லீங்க; வாட்டர் பால்தான் இருக்குது'' என்று பதில் கிடைத்தது! வாட்டர் ஃபாலைத்தான் அருவி என்று நாங்கள் குறிப்பிட்டதாக அந்த மறைத் தமிழனுக்கு விளக்கிய பிறகு, ''வாட்டர் பாலில் தண்ணீர் விழுகிறதா ?'' என்று வினவினோம். ''இல்லை, இல்லவே இல்லை; சொட்டுக்கூட இல்லை'' என்ற உறுதிமொழி பிறந்தது. ''லஞ்ச ஊழல் இல்லை, இல்லை!'' என்று ஒரு கருணாநிதிகூட அந்த அளவுக்கு அடித்துப் பேசியது கிடையாது! ஆனாலும் நாங்கள் விடுவோமா ? அடர்ந்த கானகத்தினூடே மலைச் சரிவில் ஒற்றையடிப் பாதையில்

இறங்கி ஏறுவது ஒரு மெய்சிலிர்க்கும் அனுபவமாக மட்டுமின்றிக் காய்ந்த, அழுகிய சருகுகள் காரணமாய் கால் வழுக்கும் அனுபவமாகவும் இருந்தது! கையிலிருந்த குடை அவ்வப்போது கைகொடுத்துக் காத்தது. கால் வழுக்கினாலும் கிள்ளியூர் அருவி அடியோடு காலை வாரி விடவில்லை. சென்னை கார்ப்பொரேஷன் குழாயைவிட எவ்வளவோ மேல்தான்!

ஏரோப்ளேன் ஓடையில் ஏரோப்ளேனும் இல்லை. ஓடையும் இல்லையாதலால் கரடிக் குகையில் கரடியும் இராது, குகையும் இராது என்று தீர்மானித்துவிட்டோம். ஆனால் இதிலும் எங்களுக்கு ஏமாற்றமே. பயங்கரமான குகை ஒன்று மெய்யாலுமே இருந்தது! அதில் முன்பு வாழ்ந்த இரு கரடிகளுக்குப் பதில் குலை நடுக்கம் தரும் இரு 'புல்டாக்கு'கள் இருந்தன.



○ ஏரியைச் சூழ்ந்த காடு ஆகையால் ஏர்க்காடு ஆயிற்று.

டிரான்ஸிஸ்டர் ஒன்று சினிமாப் பாட்டைக் கரடியாகக் கத்திக் கொண்டிருந்தது.

கரடிக் குகையை ஒட்டி இன்று கரடிக் குகை பங்களாவும் எஸ்டேட்டும் உள்ளன. பங்களா காவலனுக்குத் துணை, இரு நாய்களும் ஒரு டிரான்ஸிஸ்டரும். குகையினுள் எண்சாண் உடம்பைப் பாதியாகக் குறுக்கிக் குனிந்து நுழைய வேண்டும். ''கொள்ளுப் பாட்டிக்கு இதில் புகுவது கஷ்டமே இல்லை'' என்று ஜோக் அடித்தான் என் மைந்தன். சிரித்தபடியே மேலே போனால் தலைநிமிர்ந்தே நடக்க வசதி இருக்கிறது. சிறிது வெளிச்சமும் வருகிறது. அவ்விடத்திலிருந்து, ஒரு மோட்டார் சைக்கிள் செல்லக்கூடிய அளவில் உயரமும் அகலமும் உடைய குகைப் பாதை சேர்வராயன் கோயில் வரை சுமார் இரண்டு மைல் தூரத்துக்குப் போவதாகத் தெரிவித்தான் காவலன். சுற்று வட்டார எஸ்டேட் மானேஜர்கள் பலரும் மோட்டார் சைக்கிள்களை வைத்திருப்பதால் காவலனுக்கு அதை ஓர் அளவுகோலாக்கச் சட்டென்று தோன்றி




# விடுமுறையில் ஒரு ஆடம்பரம்



யிருக்கிறது. ஆனால் எங்களுக்குத் தைரியம் தோன்றவில்லை, குகைப்பாதையினைக் காலால் அளந்து பார்க்க. ''அடுத்த முறை மோட்டார் சைக்கிளுடனேயே வந்து நுழைந்து பார்க்கிறேன், இப்போ வேண்டாம்'' என்று கூறிவிட்டு நழுவினேன்.

ஒரு மலை உச்சியில் குடிகொண்டிருக்கும் சேர்வராயனே அந்த மலைத் தொடர்களுக்குச் சேர்வராயன் குன்றுகள் என்று பெயர் கொடுத்தவன். முருகப் பெருமானோ என்று முதலில் எண்ணினேன். கோயிலையொட்டி மாடு மேய்த்துக்கொண்டிருந்த ஒருவரை விசாரித்தபோது மூலவர் ராமர்தான் எனத் தெரிய வந்தது. ''வில் இருக்கிறதா ?'' ''இருக்குதுங்க.'' ''சங்கு சக்கரம்?'' ''இருக்குதுங்க.'' ''வேல்?'' ''அதுவும் இருக்குதுங்க.'' ''கதாயுதம்? சூலம்? மான்? மழு?'' ''எல்லாம் இருக்குதுங்க !'' எல்லாச் சுவாமியாகவும் பாமரருக்கு விளங்கிய சேர்வராயன், உண்மையில் என்ன சுவாமி என்று பார்த்துத்

○ இளமைப் பிராயத்துக்காக ஏங்க வைக்கும் மாண்ட் ஃபோர்ட் உயர்நிலைப்பள்ளி.

ஏர்க்காடு புகைப்படங்கள்: சந்தாமியான்

தெரிந்து கொள்ள முடியாதபடி கோயில் சதா பூட்டிக் கிடந்தது !

ஏரிக்கு அருகே தேவஸ்தான நிர்வாகிகளின் அறிவிப்புப் பலகையொன்றில் பக்தர்களுக்கு வரவேற்பு பலமாக இருந்ததை நம்பி மூன்று மைல்களுக்கு அப்பாலிருந்த கோயிலுக்கு மூன்று முறை படையெடுத்தும் சுவாமி தரிசனம் என்னவோ கிடைக்கவேயில்லை! கோயிலுக்குப் பக்கத்தில் மணிக்கூண்டு இருக்கிறது; மணியைத்தான் காணோம் ! மணிக்கூண்டில் பதிக்கப்பட்டுள்ள சலவைக் கல்லில் பிரபலஸ்தர்களின் பெயர்கள் பரிதாபமாகக் காட்சி தருகின்றன.

இந்துக் கோயில்தான் இப்படி. இதற்கு நேர்மாறான அனுபவம் தியாலஜி கல்லூரியில் உள்ள கிறிஸ்துவப் பிரார்த்தனை மண்டபத்தில் ஏற்பட்டது. அந்தக் குட்டிக் கோயிலுக்குள் நுழைந்ததுமே, 'நாம் தமிழகத்தில்தான் இருக்கிறோமா அல்லது ரோமாபுரிக்கே வந்து விட்டோமா ?' என்று சந்தேகம் ஏற்பட்டுவிட்டது. சுவரில் மொஸைக் கற்களால் உருவாகியிருந்த ஏகபிரானின் உருவம் கண்ணைக் கவர்ந்து மனத்தை உருக்கும் உன்னதக் கலைப் படைப்பு.

கிறிஸ்துவ மதப் பிரசாரகர்கள் கெட்டிக்காரர்கள். எந்த ஒரு மலை வாசஸ்தலமானாலும் அங்கே போய் ஒரு பள்ளிக்கூடம், கல்லூரி என்று ஆரம்பித்து விடுவார்கள். சுகவாசஸ்தலமுமாயிற்று, பழங்குடி மக்களைப் புது மதத்துக்கு மாறச் செய்வதும் எளிதாயிற்று. ஏர்க்காடும் இதற்கு விதிவிலக்கல்ல. அருமையான பள்ளிக்கூடங்கள் இரண்டு இங்கு நடக்கின்றன. மாண்ட்ஃபோர்ட் பள்ளிக்கூடத்தைச் சுற்றி வரும் எவருக்கும் மீண்டும் சிறுவனாகி இதில் சேரமாட்டோமா என்ற ஏக்கம் பிறக்கும். அப்படியே ஸேக்ரட் ஹார்ட் கான்வெண்ட் பெண்மணிகளைப் பாலப் பருவத்துக்கு ஆசைப்படச் செய்யும். இவை தவிர முன்னர் குறிப்பிட்ட பாதிரிமார்களை உருவாக்கும் தியாலஜி கல்லூரியும் உள்ளது. சுற்றுப்புறங்களைச் சுத்தமாகவும் அழகாகவும் வைத்துக் கொள்வதில் கிறிஸ்துவப் பாதிரிமார்களுக்கு இணை அவர்கள்தாம்.

ஏர்க்காடில் அரசாங்க பட்டு நூல்பண்ணை, சேலம் அலுமினியத் தொழிலகத்துக்கான பாக்ஸைட் சுரங்கம், எஃகுத் தயாரிப்பில் பயன்படும் மாங்கனைஸ் சுரங்கம், தாவர இயல் பூங்கா, பகோடா பாயிண்ட் என வழங்கும் குன்றின் உச்சி போன்ற காணத் தவறக் கூடாத பல இடங்கள் உள்ளன. எல்லாவற்றையும்விட மனம் கவரும் ஓரிடம் லேடீஸ் ஸீட் என வழங்கும் மலை விளிம்பு. 'இதற்கு லேடீஸ் ஸீட் என்று ஏன் பெயர் வைக்க வேண்டும் ? ஜெண்டில்மென்ஸ் ஸீட்டாக ஏன் இருக்கக் கூடாது ?' என்று வாதாடுவது சர்வதேச மாதர் ஆண்டில் முறையல்ல என்பதால் விட்டுவிடலாம். ஆனால் இங்கு உட்கார்ந்து பார்க்கும்போது ஒரு நல்ல காரணமும் புலப்படாமல் இல்லை. மாலை மயங்கி இருள் கவியும் நேரத்தில் பத்தொன்பது மைல் தொலைவில் உள்ள சேலம் நகரில் விளக்குகள் ஒவ்வொன்றாக எரியத் தொடங்குவதைச் சுமார் ஐயாயிரம் அடி உயரத்திலிருந்து நோக்குகையில் ஏராளமான வைரங்கள் ஜொலிப்பது போல் தோன்றும். லேடீஸ் ஸீட் என்பதன் பொருத்தம் புரிகிறதா ? நில மடந்தைக்கு வைரமிழைத்த மேகலாபரணத்தை அணிவித்தது போன்ற காட்சி தவிர வேறு ஓர் அற்புதத்தையும் நாங்கள் அன்று மாலை கண்டோம். இடது பக்கம் சேலம் நகர் ஜொலிக்கத் தொடங்கியது என்றால் வலது புறம் வானத்துக்கும் பூமிக்கும் மேகத் திரையிட்டதுபோல் மழை கொட்டிக் கொண்டிருந்தது. ஒரு பக்கம் மனிதன் சாதித்த அற்புதம் பெருமிதமூட்டும்; மறு பக்கம் இயற்கையின் அற்புதம் பயபக்தியூட்டும். அன்று பல இடங்களில் கடும் மழையோடு புயலும் வீசியதாகப் பின்னால் நாளிதழில் படித்து அறிந்தோம்.

ஏர்க்காடு அதிகக் கூட்டமின்றி அமைதியாக விளங்குகிறது. சுற்றுச் சூழல் இன்னும் தூய்மை கெடாமல் இருக்கிறது. நச்சுப் புகை விட்டுக் கொண்டு அவ்வப்போது வரும் அண்ணா போக்குவரத்துக் கழக பஸ் தவிர சூழ்நிலையைக் கெடுக்கும் வேறு அம்சம் ஏதும் கிடையாது. கடும் மழை பெய்யும் ஓரிரு மாதங்களைத் தவிர்த்து வருடத்தின் எந்த மாதத்தில் வேணுமானாலும் ஏர்க்காடு செல்லலாம். வசதி படைத்தவர்களுக்கு ஷெவ்ராய் ஹோட்டலும் குறைந்த பட்ஜெட் உடையவர்களுக்குச் சுற்றுலா வாரியத்தின் விடுதியும் உள்ளன.

இந்தப் பயணத்தில் மனத்தை வருத்திய விஷயம் ஒன்றே ஒன்றுதான். வறட்சி காரணமாகக் காப்பிச் செடிகளும் பல மரங்களும்கூட சில பகுதிகளில் வாடிக் கருகி இருப்பதைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தாலும் அதை இயற்கையின் விளையாட்டு என ஏற்று மனம் தேறினோம். ஆனால் ஏராளமான மரங்களை வெட்டி லாரி லாரியாகக் கொண்டு போவதைப் பார்க்க மெய்யாலுமே கண்களில் நீர் தளும்பியது. மரங்களை வெட்டுவதால் மழை பொய்க்கும் என்பது விஞ்ஞானிகள் தீர்ப்பல்லவா ? ஆனால் புதிய காப்பித் தோட்டங்களை உருவாக்கவே காட்டு மரங்கள் வெட்டப்படுவதாகவும் காப்பிச் செடிகளுக்கு உகந்தவையான நிழல் தரும் ஸில்வர் ஓக், கொய்யா, ஆரஞ்சு போன்ற மரங்கள் விரைவில் அப்பகுதிகளில் நடப்படும் என்றும் சமாதானம் கூறினார்கள்.

ஏர்க்காடு காப்பியின் ருசியை எண்ணி, அந்நியச் செலாவணியையும் கருதிச் சமாதானத்தை ஏற்றோம்.

சென்னை திரும்ப வேண்டிய தினத்தன்று ஹோட்டல் அறை ஜன்னல் வழியாகப் பார்த்தால் புல்வெளியில் போடப்பட்டிருந்த நாற்காலிகளில் திரு ஜெய்சங்கர் குடும்பம் அமர்ந்திருந்தது ! பயல்களுக்கு மொட்டை போட்டுக் கொண்டு வந்திருந்தார் ஜெய். அவ்வப்போது அந்த வாண்டுகளை அடக்கி அதிகாரம் செய்தபடியே தம்மை அணுகிய விசிறிகளுக்கு ஆட்டோகிராஃபும் போட்டுத் தந்து கொண்டிருந்தார். கலகலப்பாக உரையாடினார்.

தொடக்க தினத்தில் கமலஹாஸன் காட்சி தந்தார் என்றால் கடைசி தினத்தில் ஜெய்சங்கர் தரிசனம் அளித்தார். ஏர்க்காடு விஜயம் மாபெரும் வெற்றி என்பதற்கு இன்னமும் ஆட்சேபணை உண்டா?

# அன்றும் இன்றும்



நேற்று நிறுவப்பட்டது ஜோதி யூனிபில்ட் பம்பு



இன்றோ காணமுடிந்தது இன்ப நாள் இதுவே

முன்னேற்றத்தின் இரகசியம்—

# ஜோதி யூனிபில்ட் பம்பு

வெற்றி மிகு ஜோடி







ஆழ ஈர்ப்பு (டீப் ஸக்ஷன்) மூலம் செவ்வனே நீரிறைக்கும் திறன், அன்றாடப் பழுதுபார்ப்புத் தொல்லைக்குத் தீர்வு, மின்சாரச் செலவுகளிலே மிச்சம், நீடித்த ஆயுள்—இவை யாவும் ஜோதி யூனிபில்ட் பம்புகளிலே கிடைக்கும் முக்கிய நன்மைகள். இக் காரணத்தினால் தான் ஜோதி பம்பு காப்பியடிக்கப் படுகிறது. ஜோதி ஆராய்ச்சி நிலையத்தின் ஓயாத முயற்சிகளின் பயனாக, எப்போதுமே விவசாயிகள் இந்தப் பம்பையே கோருகின்றனர்.




**ஜோதி லிமிடெட்**, பரோடா 390 003

*quality is our creed.*

everest/24/JY-tm

கிளை: எயர் லைன்ஸ் ஹோட்டல், 177/179 மவுண்ட் ரோடு, சென்னை. போன்: 85007.
வியாபாரிகள்: ராஜம் & கோ; சதி ரோடு, ஈரோடு; ராஜா டிரேடிங் கோ; அருணாசல ஆசாரித் தெரு, சேலம்; ஆட்டோமேட்டிக் பம்பு ஸ்பெஷலிஸ்ட்ஸ், 4 பாண்டி பஜார், சென்னை;
முருகன் ஆட்டோமேட்டிக்ஸ், காளியம்மன் கோவில் தெரு, உசிலம்பட்டி;
பிரீமியர் இண்டஸ்ட்ரீஸ், செம்புதாஸ் ஸ்ட்ரீட், சென்னை.

படிப்படியாக உயர்ந்து

முன்னேற்றமடைந்த அவருக்குத் தெரியும்..

...அழகான ஆடைகளும் அதற்கு உதவின என்று !




நிச்சயமாக, மபத்லால் க்ரூப் அளிப்பவை நேர்த்தியான துணிமணிகள்தான் !

AIYARS-M. 458 TM



குழந்தைகளுடன் அதிக நேரம் இருப்பது பிடிக்கும்.

பிறந்த நாளைப் பெரு நாளாக மதித்து விருந்து, கேளிக்கைகளில் ஈடுபடும் மனிதர்கள் பலரை நமக்குத் தெரியும். ஆனால் தமது பிறந்த தினத்துக்கு முந்தையதினம் மாலை ஆறு மணியிலிருந்து உபவாசமிருந்து பிறந்த நாள் அனுஷ்டிக்கும் ஒருவரை நீங்கள் பார்த்தது உண்டா? இதோ பார்த்துக் கொள்ளுங்கள், திரு மோகன்மல் சோர்டியா அவர்களை !

சென்னையில் நூறு வருஷங்களுக்கு மேலாக மிகப் பிரபலமாக நடந்து வரும் 'ஷா அகர் சந்த் மான்மூல்' நிறுவனத்தின் அதிபர் இவர். ஜைன சமுதாயத்தினரின் ஏகோபித்த தலைவர். இன்றும் அந்த வட்டத்தில் 'படா துகான்' (பெரிய கடை) என்றால் அவரது நிறுவனத்தைத்தான் குறிக்கும். 'சேட் சாப்' என்றாலோ அவரேதான் !

ஜைன மதத்தின் முக்கிய கொள்கைகளான உயிர் கொல்லாமை, சூரியன் அஸ்தமனமான பிறகும் சூரிய உதயத்துக்கு முன்பும் உணவு உட்கொள்ளாமை ஆகியவற்றை நினைவு தெரிந்த நாளிலிருந்து (அறுபது வருடங்களாக) தீவிரமாகக் கடைப்பிடித்து வருகிறார் மோகன்மல்ஜி. மாலை ஆறு மணிக்குப் பிறகு தண்ணீர்கூட அருந்துவதில்லை. 'தனக்குள் ஏற்படும் பசி தாகம் இவற்றை மனிதனால் அடக்க முடியவில்லை என்றால், அவனால் பிறகு எதனைச் சாதிக்க முடியும்?' என்று கேட்டுச் சிரிக்கிறார்.

சற்றுப் பருத்த ஆரோக்கியமான உருவம். எளிமையான தோற்றம். பஞ்சகச்சமாக வேஷ்டி, வெள்ளை ஜிப்பா. ஐந்தடி நாலு அங்குலம் உயரம். வட்ட முகம். நீண்ட தொங்கு மீசை.' 190 பவுண்டு எடை. 74 வயது இளமை. சுறுசுறுப்பு. எல்லோரிடமும் அன்பான பேச்சு. சற்றுக் கரகரப்பான குரல். வழுக்கைத் தலை. அதன் மேல் தலைப்பாகை. குறிப்பிட்ட வேலையை ஒருவரிடம் ஒப்படைத்துவிட்டால், வீணாக அலட்டிக் கொள்ளாத பழக்கம். தம்மைப் பற்றிப் பேசச் சற்று லஜ்ஜைப்படும் சுபாவம். தெய்வ வழிபாட்டில் நம்பிக்கை — இவற்றின் மொத்த உருவமே மோகன்மல்ஜி.

தலையிலிருந்து கால் வரை 'ராசி'யான மனிதர். எனவே, தங்கசாலைத் தெரு வட்டாரத்தில், இந்திக்காரர்கள் மட்டுமின்றி அருகே தமிழ் வியாபாரிகளும்கூட எந்த நல்ல காரியத்தையும் இவரது அனுமதி, உதவி இன்றி ஆரம்பிப்பதில்லை. எந்தத் துறையில் வியாபாரம் ஆரம்பிக்கலாம் என்று ஆலோசனை கூறுவார். அதோடு அவரை விடமாட்டார்கள். கல்விக்கும், பொதுமக்கள் நல்வாழ்வுக்கும் பல லட்சங்களை வாரி வாரி வழங்கிய அந்தப் பெருந்தகையின் கரங்களிலிருந்து ஆயிரம், ஐயாயிரம் என்று பணத்தை ராசிக்காகப் பெற்றுக் கொண்டுதான் வியாபாரத்தைத் தொடங்குவார்கள் ! புது வியாபாரிகளின் கணக்கில் முதல் வரவு மோகன்மல்ஜியிடமிருந்து தான் இருக்க வேண்டும்.

# ஜைனர்களிடையில் ஜொலிக்கும் ஒருவர்!



அவர்களுக்கு மோகன்மல்ஜி கூறும் அறிவுரை: ''வரவுக்கு மேல் என்றும் செலவு செய்யாதே. செலவைக் குறைப்பதுதான் வியாபாரத்தில் முன்னேறச் சிறந்த வழி !''

சென்னை மீனம்பாக்கத்தில் இருக்கும் ஏ.எம். ஜெயின் கல்லூரி, கல்வித் துறைக்கு மோகன்மல்ஜி ஆற்றியுள்ள மகத்தான தொண்டு.

1951ம் ஆண்டு தனிப்பட்ட முறையில் இவர் கொடுத்த இரண்டு லட்சம் ரூபாயைக் கொண்டுதான் 1952ம் ஆண்டில் எஸ்.எஸ். ஜெயின் எஜுகேஷனல் ஸொஸைட்டி ஜெயின் கல்லூரியைத் தொடங்கிற்று. அதன் பிறகும் சுமார் ஐந்து லட்சம் ரூபாய் வரை சொந்த நன்கொடையாகவும்,

---

**புது வியாபாரிகளின் கணக்கில் முதல் வரவு மோகன்மல்ஜியிடமிருந்துதான்.....!**

பல லட்சங்களை மற்றவரிடமிருந்து வசூலித்தும் இவர் கல்லூரிக்குக் கொடுத்திருக்கிறார்.

ராஜஸ்தானிலிருந்து 125 ஆண்டுகளுக்கு முன் துணிச்சலும், பரந்த நோக்கும் கொண்ட அகர்சந்த் சென்னைக்கு வந்து குடியேறி வியாபாரத்தைத் தொடங்கினார். அவருக்கு மக்கட்பேறு இல்லாமற் போகவே, மான்மூல் என்பவரைத் தத்தெடுத்துக் கொண்டு வியாபாரத்தை ஒப்படைத்தார். மான்மூல்ஜிக்கும் பிள்ளை இல்லாததால், சோஹன்மல் தத்து எடுக்கப்பட்டார். சோஹன்மல்ஜிக்கும் மக்கட்பேறு இல்லாமையால், அவருக்கு வாரிசாக ராஜஸ்தான் மாநிலத்தில் ஜோத்பூர் அருகே ரோஹரி கிராமத்தில் பிறந்த மோகன்மல் சோர்டியா என்ற சுறுசுறுப்பும் தெய்வ பக்தியும் நிரம்பிய இளைஞன், சென்னைக்கு வந்து சேர்ந்தான். அறுபது ஆண்டுகளாகப் புகழ்பெற்று வளர்ந்த பெரிய நிறுவனத்துக்கு அதிபராகத் தேர்ந்தெடுக்கப்பட்டான்.

சென்னையில் தற்போது சிறந்து விளங்கும் தொழிலதிபர்களான கிஸ்ராஜ்மல் சோர்டியா ஸிரேமல் ஹிராசந்த் இருவரும், மோகன்மல் சோர்டியாவின் சொந்த சகோதரர்கள்.

அன்னதானம், வஸ்திர தானம், செல்வ தானம் ஆகியவற்றைச் செய்து வந்த சோர்டியா அவர்களுக்கு அவற்றையெல்லாம் விடச் சிறந்ததும், மேம்பட்டதுமான ஒரு சேவை பற்றிய எண்ணம் எழுந்தது.

பசிக்கு உணவு அளித்தாலும், வேறு விதங்களில் உதவினாலும் அவன் மீண்டும் நம்மிடமோ அல்லது வேறு யாரிடமோ யாசகம் கேட்கத்தான் போகிறான். ஆனால் கல்விச் செல்வம் பெற்ற மனிதன் பிறரிடம் யாசித்துப் பிழைக்கக் கூசுவான். தானே சம்பாதித்துத் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளும் சக்தியைக் கல்வி அவனுக்கு அளித்துவிடுகிறதல்லவா? எனவே கல்வித் துறையில் செய்யப்படும் சேவைதான் மிகவும் முக்கியம் என்பதை உணர்ந்தார் படிக்காத மேதை! ஆம், மோகன்மல் சோர்டியா நான்காம் வகுப்பு வரையில்தான், வறுமை, சந்தர்ப்பமின்மை காரணமாகப் படிக்க முடிந்தது!

திருவாளர்கள் தாராசந்த் கலாடா, மாங்கிசந்த் பண்டாரி ஆகிய இருவருடன் சேர்ந்து 1927ல் எஸ். எஸ். ஜெயின் எஜுகேஷனல் ஸொஸைட்டி ஆரம்பிக்கப்பட்டது. மிகச் சிறிய அளவில் தொடங்கிய இந்த ஸொஸைட்டி ஓர் ஆரம்பப் பாடசாலையை நடத்தியது. தமிழ் நாட்டு மக்களின் நற்பயன், அதிர்ஷ்டம் காரணமாக இன்று ஆலமரம் போல் வளர்ந்து பல்வேறு கல்வி ஸ்தாபனங்களாகத் தழைத்திருக்கிறது. ஆயிரம் மாணவர்களுக்கும் அதிகமாகப் படிக்கும் ஏ. ஜி. ஜெயின் ஹைஸ்கூல், எஸ்.எஸ். ஜெயின் மஹிளா வித்யா சங் நடத்திவரும் கணேஷிபாய் கலாடா பெண்கள் உயர்நிலைப் பள்ளி, ஜெயின் கன்யா வித்யாலயா பிரைமரி ஸ்கூல் ஆகியவை சிறப்பாக இயங்கி வருகின்றன. சென்னை நகரிலேயே ஜெயின் உயர்நிலைப் பள்ளியில் மட்டும்தான் தமிழ், இந்தி, ஆங்கிலம் ஆகிய மூன்றையும் போதனை மொழிகளாகக் கொண்டு பாடங்கள் நடத்தப்படுகின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

குறுகிய கால அளவில் பெரு மதிப்பு அடைந்திருக்கும் ஏ. எம். ஜெயின் கல்லூரி தற்போது பேராசிரியர் வி. வி. ராமன் அவர்களை முதல்வராகக் கொண்டிருக்கிறது. ஜைன மாணவர்களுக்கு உதவி செய்யும் பொருட்டு இந்தக் கல்லூரி ஆரம்பிக்கப்பட்டிருந்தாலும், இங்கு மொத்தம் படிக்கும் இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட மாணவர்களில் சுமார் நானூறு பேர்களே ஜைன மாணவர்கள். அவர்களைப் போல் நான்கு மடங்கில் இதர மாணவர்கள் கல்வி கற்கிறார்கள்.

பிரசித்திபெற்ற தாதா அன் கோ அதிபர் திரு லால்சந்த் தாதா அவர்களுடன் சேர்ந்து மோகன்மல்ஜி தொடங்கிய ஜெயின் மெடிகல் ரிலீஃப் ஸொஸைட்டி தற்போது சென்னை நகரம் முழுதும் பரவியுள்ளது. பதினைந்து டிஸ்பென்சரிகளும், ஒரு பிள்ளைப் பேறு விடுதியும், சிறந்த மருத்துவ நிபுணர்கள் மேற்பார்வையில் நடக்கின்றன. மிகவும் குறைந்த செலவில் பொதுமக்களுக்கு மருத்துவ உதவி கிடைக்கிறது. நவீன எக்ஸ்ரே சாதனங்களுடன் கூடிய பரிசோதனைச் சாலையும் இத்துடன் இணைந்திருக்கிறது.

மோகன்மல்ஜி தினமும் காலையில் ஐந்து மணிக்கு முன்பே எழுந்துவிடுவார். உருவ வழிபாடு செய்வதில்லை. தெய்வத்துக்குத் தனி உருவம் கிடையாது என்ற கொள்கை உடைய ஜைன மதத்தைச் சேர்ந்தவர். நடந்தே பிரார்த்தனைக் கூடத்துக்குச் செல்வார். 'ஸாமாயிக்' எனப்படுவது நாற்பத்தெட்டு நிமிட அளவில் செய்யப்படும் பிரார்த்தனை. வேறு எந்தச் சிந்தனையும் இல்லாது இறைவனிடம் ஐக்கியமாகும் வழிபாடு. இரட்டை ஸாமாயிக் செய்வதுமுண்டு. தொடர்ந்து பதிக்ரமன் — அதாவது ஆத்ம பரிசோதனை. 7.30 மணிக்கு வீடு திரும்புவார். பேரக் குழந்தைகளுடன் சேர்ந்து காலை உணவு அருந்துவார். பிறகு தமது காரியாலய அறைக்கு வருவார். (வீட்டிலேயேதான்.) வியாபார ரீதியான பேச்சு வார்த்தைகள், ஆலோசனைகள் முடிந்து மாலை ஆறு மணிக்கு மீண்டும் கோயில். பிறகு உலாவுவதற்காக மெரீனா பீச். தமது பேரன்களில் ஒருவனை உடன் அழைத்துச் செல்வார். இரவு 8-30 மணிக்கு வீட்டில் மீண்டும் தியானம். ஒன்பது மணிக்குப் படுக்கை. குழந்தைகளுடன் அதிக நேரம் இருப்பது பிடிக்கும்.

ரத்தன் சந்த், பாரஸ்மல், ஸர்தார்மல், ரஞ்சித்மல், சம்பத்மல் ஆகிய ஐவரும் இவர் புதல்வர்கள். மூன்று பெண்கள். ஒன்பது பேரன்கள். ஆறு பேத்திகள். கொள்ளுப் பேரன்கள் நான்கு. கொள்ளுப் பேத்திகள் மூன்று. ஒற்றுமையாகப் பெரியவர் சொல்படி கேட்டுக் கொண்டு இவ்வளவு பெரிய குடும்பம் வாழ்வாங்கு வாழ்ந்து வருகிறது.

வட சென்னை ஏகாம்பரேசுவரர் கோயில் தெருவில் பன்னிரண்டு லட்சம் ரூபாய் செலவில் ''ஜெயின் பவன்'' என்ற பெயரில் பெரிய கம்யூனிடி ஹால் நிறைவுபெறவிருக்கிறது. அதன் நிர்மாண கமிட்டியின் தலைவர் என்ற முறையில் ஐம்பதாயிரம் ரூபாய் நன்கொடை அளித்திருக்கிறார். மத சம்பந்த

மான கூட்டங்கள், திருமணம் போன்ற விசேஷங்களுக்கு ஏற்றதாக இது அமைந்திருக்கிறது.

அவரது சொந்த ஊரான குசேராவில் ராஜஸ்தான் மாணவர்களுக்குப் போர்டிங் ஸ்கூல், இவரது தந்தை பெயரால் இலவச மருத்துவ மனை, குடிதண்ணீர் வசதி, கண் வழங்கும் திட்டம் ஆகியவை திறம்பட இயங்கி வருகின்றன.

இவரது பொதுநல நோக்கையும் குறிப்பாக 1939 பஞ்சத்தில் மக்களுக்கு இவர் செய்த சேவைகளையும் மெச்சி, ஜோத்பூர் அரசாங்கம் இவருக்கு 'பல்கி ஸிரோபாவ்' என்ற விசேஷ விருதை அளித்துக் கௌரவித்தது. 1972ல் பாரத அரசு பத்மஸ்ரீ வழங்கியது !

சென்னையில் ஜைன சமுதாயத்தினரிடையே எந்த ஒரு நல்ல காரியத்துக்கும் நன்கொடை திரட்டுவதென்றால் மோகன்மல்ஜியிடம்தான் ஆரம்பமாகிறது. அவர் தமது நன்கொடையை அறிவித்த பின்னர், மற்றவர்கள் முழுமனத்துடன் அதில் தொடர்ந்து ஈடுபட்டுத் திட்டத்தை வெற்றிகரமாக முடிக்கிறார்கள். ஸேட் சாப் கொடுக்கும் நன்கொடைக்கு உட்பட்டே வழங்குவது என்பது மற்றவர்கள் அவருக்குக் காட்டும் மரியாதை.

மற்றவர்கள் அவரைத் தலைவர் போல் மதித்தாலும், பிறர் சொல்வதில் நல்ல கருத்து இருந்தால் அதை உடனே வரவேற்கும் சுபாவம் உடையவர் திரு சோர்டியா. தீபாவளியைத் தென்னிந்தியர்களைவிட ஒரு படி அதிகமாகவே இவர்கள் கொண்டாடுவது வழக்கம். 1962ம் ஆண்டு இந்தியா—சீன யுத்தம் நடந்து கொண்டிருந்த போது, அந்த ஆண்டு தீபாவளிக்கு விசேஷ செலவுகள் செய்யாமல் அந்தப் பணத்தை அனைவரும் அப்படியே தேசியப் பாதுகாப்பு நிதிக்குக் கொடுத்துவிடலாம் என்று அவரது பேரன் திரு கைலாஷ்மல் துகார் யோசனை தெரிவித்த போது, அதை முழு மனத்துடன் வரவேற்று, அதன்படி அனைவரையும் நடந்து கொள்ளச் செய்தார். கணிசமான தொகை நாட்டுக்குக் கிடைத்தது.

இவருக்குக் கைரேகை பார்ப்பதில் அபார தேர்ச்சி உண்டு. புதிய வியாபாரம் தொடங்குவது, திருமணம் போன்றவற்றுக்கு நல்ல நாள் முகூர்த்தம் குறித்துக் கொடுப்பது இவரது 'ஹாபி'. மற்றொரு பொழுதுபோக்கு ஜைன மத நூல்களைப் படிப்பது !

''உங்கள் வெற்றியின் ரகசியம் என்ன?''

''எனது வாழ்க்கையை நீங்கள் ஒரு வெற்றி என்று கருதினால் அதற்கு நான் நன்றி சொல்ல வேண்டும். பலவிதங்களிலும் மகிழ்ச்சியான வாழ்க்கை அமைவது இறைவனின் பிரசாதம். இளமையிலிருந்தே எனது தாயார் கூறிய அறிவுரைகள் காரணமாய்த் தெய்வத்தின் பேரில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டு நேர்மை, சத்தியம், பிறருக்கு உதவி செய்தல் ஆகியவற்றைக் கடைப்பிடித்து வருகிறேன்.''

''உங்களுக்கு மிகவும் மகிழ்ச்சி அளிப்பது எது ?''

''நான் எப்போதோ செய்த சிறிய உதவி காரணமாய்க் கல்வி பெற்று நல்ல நிலைக்கு உயர்ந்தவர்கள் அதை என்னிடம் கூறி மகிழும் போது ஆனந்தப்படுகிறேன்.''

நாட்டின் பொருளாதாரத் தொழில் வளர்ச்சி பற்றி வினவும்போது சோர்டியா கூறுகிறார் :

''தொழில்களுக்கு நிதிஉதவி அளிப்பதோடு மட்டும் அரசாங்கம் நிறுத்திக் கொள்ள வேண்டும். உற்பத்தியைப் பாதிக்கும் எந்தவித சட்டத்தையும் செய்யக் கூடாது. உற்பத்தி எல்லாத் துறையிலும் பெருக வேண்டும். மக்களிடம் கஷ்டப்பட்டு உழைத்துச் சம்பாதிக்க வேண்டும் என்ற மனப்பான்மை வளர வேண்டும். அயல்நாட்டு வஸ்துக்களின்மீது மக்களுக்கு இருக்கும் மோகம் நீக்கப்பட வேண்டும். விவசாயத்துக்கு முக்கியத்துவம் அளிக்கப்படுதல் அவசியம். பசுஹத்தி நிறுத்தப்பட வேண்டும். வசதி இருப்பவர்கள் தங்கள் தேவைகளைக் குறைத்துக் கொள்ள வேண்டும். அனைவரும் நம் சந்தோஷத்தைவிட நாட்டின் சுபிட்சம் முக்கியம் என்ற மனப்பான்மையைப் பெற வேண்டும்.''

'ஷா அகர்சந்த் மான்மல் நிறுவனத்தின் நூற்றாண்டு நிறைவு விழாவையொட்டி 'அகர்சந்த் மான்மல் ஸெண்டினரி டிரஸ்ட்' ஒன்று நிறுவப்பட்டு, இவர் தலைமையில் தர்ம ஸ்தாபனமாகச் செவ்வனே இயங்கி வருகிறது. ஆங்கில மருந்துகள் தயாரிக்கும் பிரபல கம்பெனி மெடோ ஃபார்ம் இவரது குடும்ப ஸ்தாபனம்.

பகவான் மஹாவீரரின் 2500 ஆண்டு நிறைவு தினத்தை முன்னிட்டுச் சென்னையில் விசேஷ விழாக்கள், கூட்டங்கள், பிரார்த்தனைகள் நடத்திய குழுவுக்கு இவர் தலைவராயிருந்து கண்டோர் வியக்கும் வண்ணம் அனைத்தையும் நிறைவேற்றித் தந்தார்.

தமது பிறந்த நாளை உபவாஸத்தில் கழிக்கும் இவர், குடும்பத்தில் உள்ள மற்றவர்களின் பிறந்த நாட்களின் போது, செவிடர் குருடர் பள்ளி, தயாசதன் போன்ற ஸ்தாபனங்களுக்குச் சென்று உணவு, ஆடைகளைக் கொடுத்து மகிழ்கிறார்.

இவரது மனைவி திருமதி நைனி காவர்பாய் தெய்வ பக்தி மிகுந்தவர். எல்லா வகைகளிலும் அவருக்கு நல்துணையாக நிற்பவர்.

பல லட்சக்கணக்கான ரூபாய்களை இது வரை பல நற்பணிகளுக்கு வழங்கி யிருக்கும் இந்தப் பெருந்தகையாளர் தமது பெயரால் இது வரை ஒரு காரியமும் செய்ததில்லை ! பிறரையும் தம் பெயரால் எதையும் தொடங்க அனுமதிப்பதில்லை !

கட்டுரை : எஸ். ரஜத்
மேலட்டை வண்ணப்படம்,
புகைப்படங்கள் : உத்ரா

**சரியாய்ப் போச்சு !**

- ஹிட்லர் கேட்டான்.
''ஜோசியரே! நான் எப்போது இறப்பேன்?''
''யூதர்கள் விடுமுறை நாளன்று.''
''யூதர்களுக்கு என்று விடுமுறை?''
''நீங்கள் இறக்கும் நாளன்று!''

— முரளி





# பொன்னியின் புதல்வர்

சுந்தா

## 46. பிரசார எழுத்தாளரா ?

சொல்லுக சொல்லிற் பயனுடைய; சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்

நவீனப் பிரசாரக் கலை பல நுட்பங்களும் உத்திகளும் கொண்டதாய் வளர்ந்திருக்கிறது. இதை விரிவாகக் கற்றுக் கொடுப்பதற்காக அங்கங்கே உலகில் பல பயிற்சிக் கூடங்கள் இருக்கின்றன; தில்லியிலும் ஒன்று இருக்கிறது (*Institute of Mass Communication*).

பேச்சின் மூலமும் எழுத்தின் மூலமும் மனிதர்கள் தொடர்பு கொள்ளத் தொடங்கிய காலத்திலிருந்தே ஏதாவது ஒன்றுக்காகப் பிரசாரம் நடந்து வந்திருக்கிறது. நம் தேசத்திலும், தமிழ் நாட்டிலும் அப்படியே. நீதி போதனை, மத போதனை என்பவை எல்லாம் பிரசாரம் அன்றி வேறென்ன? பிரசாரம் என்ற சொல்தான் புதிது.

ஆங்கிலச் சொல், ''ப்ராபகண்டா'' (*Propaganda*) என்பதை, நமது பத்திரிகையாளர்கள் இப்படிப் ''பிரசாரம்'' என மொழிபெயர்த்து வழக்கத்துக்குக் கொண்டு வந்துள்ளார்கள். பழக்கத்தால் இது, ஒரு கருத்தை அல்லது கொள்கையைப் பரப்புதல் என்ற சிறப்புப் பொருளைக் கொண்டுவிட்டது.

தமிழகத்தில் முதலாவதாக வகையாகவும் விரிவாகவும் நடந்த பிரசாரம், பக்தி நெறியைப் பரப்புவதற்காக ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் நீடித்து நடந்ததாகும். ''பொன்னியின் செல்வன்'' நாவலில் கல்கி பொதிந்து தந்துள்ள முன்காலத்துச் செய்திகள் பலவற்றில், அந்தப் பக்திப் பிரசார இயக்கம் பற்றியதும் ஒன்று :

பழந்தமிழ் நாட்டில் ஏறக்குறைய அறுநூறு வருஷ காலம் பௌத்த மதமும் சமண மதமும் செல்வாக்குப் பெற்றிருந்தன. இந்தச் செல்வாக்கினால் தமிழகம் பல நலங்களை எய்தியது. சிற்பம், சித்திரம், கவிதை, காவியம் முதலிய கலைகள் தழைத்தோங்கின. பின்னர், ஆழ்வார்களும் நாயன்மார்களும் தோன்றினார்கள். அமுதொழுகும் தெய்வத் தமிழ்ப் பாசுரங்களைப் பொழிந்தார்கள். வைஷ்ணவத்தையும் சைவத்தையும் தழைத்தோங்கச் செய்தார்கள். இவர்களுடைய பிரசார முறை மிகச் சக்தி வாய்ந்ததாயிருந்தது. சமயப் பிரசாரத்துக்குச் சிற்பக் கலையுடன்கூட இசைக் கலையையும் பயன்படுத்திக் கொண்டார்கள். ஆழ்வார்களின் பாசுரங்களையும் மூவர் தேவாரப் பண்களையும் தேவகானத்தையொத்த இசையில் அமைத்துப் பலர் பாடத் தொடங்கினார்கள். இந்த இசைப் பாடல்கள் கேட்போர் உள்ளங்களைப் பரவசப்படுத்திப் பக்தி வெறியை ஊட்டின.

(முதல் பாகம் அத். 12)

அந்தக் காலத்துத் தெய்வ பக்தி இயக்கத்தைப் போல், ஆனால் அதைவிடத் தீவிரமாகவும் விரிவாகவும், கடந்த நூற்றாண்டின் இறுதியிலிருந்து தொடங்கி நடந்தது தேசபக்தி இயக்கம். இந்த இயக்கத்தின் முதற் பெரும் ''பிரசாரக் கவிஞர்'' பாரதியார்.

முதன் முதலாகப் பாரதியார் மூலம் தேசபக்தி ஊட்டப் பெற்ற கல்கி, தேசியப் பிரசாரக் கலைஞராய்ப் பரிணமித்தார். பெரும்பாலும் கவிதை மூலம் பாரதியார் செய்த பிரசாரத்தை, பெரும்பாலும் உரை நடை மூலம் கல்கி செய்தார். தமது பிரசாரத்துக்குக் கல்கி, தமது சொந்தச் சொல் வன்மையுடன் பாரதியாரின் கவி வன்மையைத் துணையாகச் சேர்த்துக் கொண்டார். பாரதியாரின் கவி வாக்கை, தமது கதைகளிலும் கட்டுரைகளிலும் பொதிந்து பொதிந்து மீண்டும் மீண்டும் சொல்லி, அந்தக் கவிஞரின் வாக்கும் தேசபக்தியும் மேலும் மேலும் பரவச் செய்தார்.

மற்றும் சிலரைப் போலவே கல்லாக் கலையாகப் பிரசாரக் கலையைக் கல்கி பயின்று தேர்ந்தார். முதலில் அவர் செய்தது கதர்ப் பிரசாரம். பள்ளிப் படிப்பை விட்ட பின்னரும், முதலாவது சிறைவாசத்துக்குப் பிறகும், திருச்சியிலும் அந்த மாவட்டத்துக் கிராமங்களிலும், பேச்சின் மூலம் அவர் அந்தப் பிரசாரத்தை நடத்தினார். அதைப்

பின்னர் நவசக்தியிலும் ஆனந்தவிகடனிலும் எழுத்து மூலம் தொடர்ந்தார். ''ராணுவ பலம் நமக்கேது, கதர் ராம பாணம் இது போதும்'' என்று அக்காலத்தில் பரவிய பாஸ்கரதாஸ் பாடலைப் போல, கதர் ஒன்றாலேயே எல்லாம் ஆகிவிடும் என்று மிகைப் பிரசாரம் செய்யவில்லை கல்கி; மட்டுப்பாட்டையும் எடுத்துச் சொல்லி இங்கிதமாய்ச் செய்தார் :

என்றைய தினம் மகாத்மா காந்தி இந்தியாவின் பொது வாழ்வில் தலையிட்டாரோ, அன்றைய தினத்திலிருந்தே கிராமத் தொண்டின் முக்கியத்தை வற்புறுத்தி அதற்குரிய பிரயத்தனங்களைச் செய்து வந்திருக்கிறார். இதனாலேயே கைராட்டின இயக்கத்தைச் சுதந்திரப் போராட்டத்தில் ஒரு முக்கிய அம்சமாகச் சேர்த்திருக்கிறார்.

சென்ற பதினைந்து வருஷ அனுபவத்தின் பயனாக, கிராமவாசிகளின் நிலைமையைப் பற்றி முன்னைக் காட்டிலும் நன்கறிந்து கொண்ட மகாத்மாஜி, கைராட்டையைப் போல் இன்னும் சில கிராமத் தொழில்களையும் புதுப்பிக்கும் நோக்கத்துடன்; கிராமக் கைத்தொழில் சங்கத்தை இப்போது ஸ்தாபித்திருக்கிறார்.

''மகாத்மாஜி தற்சமயம் தொடங்கியிருக்கும் வேலை எவ்வளவு தூரம் பயன் அளிக்கும் ?'' என்பது ஒரு கேள்வி. ரூபாய் அணா பைசாக் கணக்கில் பார்த்தால், பலன் நாம் பிரமித்து விடும்படியாய் இராது என்றே வைத்துக் கொள்ளலாம். நெல் இயந்திரத்தை எதிர்த்து உரலும் உலக்கையும் சண்டையிட்டு ஜயித்ததென்றால், அது ஒரு மகத்தான ஆச்சரியமாகவே இருக்கும். தற்சமயம் கைராட்டினமும் கதர் இயக்கமும் எவ்வளவு பலன் அளிக்கிறதோ, அவ்வளவு பலன்தான் மற்றக் குடிசைத் தொழில் முயற்சிகளிலும் கிடைக்கும் என வைத்துக் கொள்வோம்.

ஆனால், மற்றொருவிதத்தில் இந்தக் கிராமக் கைத்தொழில் சங்க ஸ்தாபனத்தினால் மகத்தான பயன் ஏற்படப் போகிறது; ஏற்கனவே ஏற்பட்டுவிட்டதென்றே சொல்லலாம். அதுதான், பொதுவாக நகரவாசிகளிடமும், சிறப்பாக அரசியல்வாதிகளிடமும் ஏற்பட்டிருக்கும் மன மாறுதல். அதைவிட முக்கியமானது, எஃகுச் சட்ட வர்க்கத்தாரின் மனங்கூடச் சிறிது இளகி ''இதோ நாங்களும் கிராமத் தொண்டு செய்யப் போகிறோம்'' என்று மார் தட்டிக் கொண்டு அவர்கள் முன்வந்திருப்பதுதான்....

சர்க்கார் என்ன செய்தாலும் பொது ஜனங்களின் கடமை தெளிவானது. வேறு எது எப்படிப் போனாலும் நமது கைத்தறித் தொழிலையாவது நாம் காப்பாற்றியாக வேண்டும். கதர் அல்லது கைத்தறித் துணியையே அணிவதாக உறுதி கொள்ள வேண்டும்.

(ஆ. வி. 3-3-35)

ஆனந்தவிகடனில் சேர்ந்தவுடனேயே, அதைக் கல்கி, தேசியக் காங்கிரஸ் கட்சியின் பிரசாரக் கருவியாக மாற்



1. ''என்பேரிலே உள்ள கோபத்தினாலே அவர் அப்படி எழுதினார் என்றதைவிட ராஜாஜியின் பேரிலே உள்ள பக்தியினால் எழுதியிருக்கிறதுதான் என் அபிப்பிராயம்.''

2. பெரும்பாலும் கவிதை மூலம் பாரதி செய்த பிரசாரத்தைப் பெரும்பாலும் உரைநடை மூலம் கல்கி செய்தார்.

3. முதன் முதலாகக் கல்கியின் எழுத்து பற்றி மதிப்பிடு செய்த ஏ. வி. சுப்பிரமணிய அய்யர்.

4. ''கலை கலைக்காகவே என்பது என்னைப் பொறுத்தவரை பொருள் புரியாத வாதம்'' - அகிலன்.







றினார். அந்தக் கட்சியின் தொகை பலத்தைப் பெருக்குவதற்காகப் பல கட்டுரைகளை அவர் எழுதினார். அவற்றில், ''மிஸ்டர் நாலணா'' என்பது, சுவையானதும் பயனுள்ளதாயும் இருந்தது. அதன் கடைசிப் பகுதி :

நீங்கள் ஏன் காங்கிரஸ் அங்கத்தினராக வேண்டும் என்பதைப் பற்றி விகடன் சொல்லிக் கொண்டிருக்க வேண்டியதில்லை. ''நமது தேசம் அடிமைத் தேசமாயிருப்பது அவமானம்'' என்று நினைக்கும் ஒவ்வொருவரும் உடனே காங்கிரஸ் அங்கத்தினராக வேண்டியதென்பதில் சந்தேகமென்ன ?

தமிழ் மக்கள் நினைத்தால் முடியாத காரியம் ஒன்றில்லை. தேர்தலில் அவர்கள் செய்த வேலையைப் பற்றி இன்னும் உலகமெல்லாம் பேசிக் கொண்டிருக்கிறது. ஆனால் அவர்கள் இப்பொழுதும் அதே மாதிரி நினைக்க வேண்டுமே, அதற்காகத்தான் விகடன் இவ்வளவு தூரம் எழுதுவது.

மார்ச் மாதக் கடைசிக்குள் தமிழ் நாட்டில் எத்தனை ஆயிரம் பேர் காங்கிரஸ் அங்கத்தினர்களாகச் சேர்ந்திருப்பார்கள்? விகடன் இந்தப் பிரச்னையில் இறங்க இப்பொழுது தயாராயில்லை. காரணம், எங்கே ஒருவேளை குறைத்துச் சொல்லிவிடப் போகிறோமோ என்கிற பயம்தான். (ஆ. வி. 24 2-35)

தேர்தல் சமயங்களில் கல்கி செய்த பிரசாரம் வாசகர்களின் மனத்தை ஒருங்கே உணர்ச்சியாலும் பகுத்தறிவாலும், காங்கிரஸ் வேட்பாளர்களின் பக்கம் திருப்பியது. தேர்தல்கள் நெருங்கும் சமயங்களில் அவர், வெவ்வேறு காங்கிரஸ் வேட்பாளர்களின் தகுதிகளையும் தியாகங்களையும் எடுப்பாகச் சொல்லி எழுதிய தலையங்கங்களும் கட்டுரைகளும் அவர்களுடைய வெற்றிக்குப் பெரிதும் உதவியாய் இருந்தன.

கல்கியின் பேனாத் தாக்குதலுக்குப் பின்னர் சில சந்தர்ப்பங்களில் இலக்கானவர்கள்கூட, ஆனந்தவிகடன்மூலம் அவர் காங்கிரஸ் கட்சிக்குச் செய்த பணியைப் பாராட்டிப் பேசினார்கள். உதாரணமாய், தினமணி கதிர் ஆசிரியர் ''சாவி'', பேட்டி ஒன்றில் கேட்ட கேள்விகளுக்குக் காமராஜ் கூறிய பதில்கள் :

''கல்கியைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?''

''நல்ல எழுத்தாளர். ஆனந்தவிகடன்லே அவர் எழுதிய தலையங்கம் எல்லாம் காங்கிரசுக்குப் பெரிய பலம் தேடிக் கொடுத்தது.''

''ராஜாஜி வேண்டுமா வேண்டாமா என்று தமிழ் நாட்டிலே ஒரு பெரிய கிளர்ச்சி நடந்ததே ? அப்போ கல்கி உங்களை ரொம்பத் தாக்கி எழுதினாரே, அதைப் பற்றி நீங்க என்ன நினைக்கிறீங்க ?''

''என் பேரிலே உள்ள கோபத்தினாலே அவர் அப்படி எழுதினாருங்கறதைவிட ராஜாஜியின் பேரிலுள்ள பக்தியினால் எழுதினாருங்கறது தான் என் அபிப்பிராயம். எப்படி எழுதினாலும் ரொம்பத் தெளிவான எழுத்து. காங்கிரஸை வளர்க்கறதுக்கு அவரும் வாசனும் ரொம்ப உதவி செஞ்சிருக்காங்க.''

(தினமணி கதிர் 11-9-70)

ராஜாஜியின் பேரிலுள்ள பக்தி என்று காமராஜ் சொன்னது முற்றிலும் உண்மை. ராஜாஜி மீது கல்கி உண்மையிலேயே பரம பக்திதான் கொண்டிருந்தார்.

தமது சொந்தப் பத்திரிகையை அவர் ராஜாஜிக்கான பிரசாரக் கருவியாகப் பயன்படுத்தியதற்கு முன்னால், ஆனந்த விகடனையும் பெரும் அளவு அப்படியே பயன்படுத்தினார். அரசியல் துறையில் ராஜாஜி சொல்வதெல்லாம் சரி, செய்வதெல்லாம் சரி என்று ஆமோதித்தார். ராஜாஜியின் கொள்கைகள், நிலைகள், இரண்டிலும் கொண்ட மாற்றங்கள் எல்லாவற்றையும் ஒருவித மதப் பற்றுடன் ஆதரித்து எழுதினார்.

''கண்மூடித்தனமானது'' என்று, வேற்றுக் கட்சியாரும், காங்கிரஸ் கட்சியிலேயே ராஜாஜியுடன் வேற்றுமை கொண்டவர்களும், கல்கிமீது மிக்க அன்பு கொண்டவர்களில் சிலரும், பழித்துச் சொல்லும் விதத்தில் இருந்தது அந்த ஆதரவு. அப்படி அவர்கள் பழிக்கும்படியாக கல்கி ஏன் நடந்து கொண்டார் என்று கேட்டால், ராஜாஜி மீதான பக்தியினால்தான் என்பதையே மீண்டும் சொல்ல வேண்டும் — அவருடைய ஆளுமையில் அதை ஒரு குறை என்று கொண்டாலும் சரி, குணம் என்று கொண்டாலும் சரி.

ராஜாஜியின் அரசியல் கொள்கைகளையும் நிலைகளையும் எப்போதும் கல்கி ஆதரித்து எழுதினார் என்பதை வைத்துக் கொண்டு, அவை எல்லாமே அவருக்கு உடன்பாடாக இருந்தன என்று எண்ணலாகாது. பெரும்பாலானவற்றில் அவருக்கு உடன்பாடுதான் என்றாலும், சில பிரச்னைகளில் அவர் கருத்து வேற்றுமை கொண்டதுண்டு. '' இது சரியல்ல, இப்படிச் செய்யலாகாது'' என்று கல்கி, தம் தந்தையாருடன் வாதம் புரிவதை அடிக்கடி தாம் கேட்டிருப்பதாக, ராஜாஜியின் குமாரர் நரசிம்மன் சொல்கிறார்.

ராஜாஜியுடனும் கல்கியுடனும் நெருங்கிப் பழகியவரான ரா. பார்த்த

சாரதி (பரதன்) கட்டுரை ஒன்றில் எழுதி இருப்பதை இங்கே கவனிக்கலாம் : ''பல சந்தர்ப்பங்களில் ராஜாஜியுடன், பல பொது விஷயங்களைப் பற்றி அவர் தைரியமாக விவாதிப்பார். ராஜாஜியும் அவருடைய அபிப்பிராயங்களைச் சீர்தூக்கி மதித்துத் தேவையான அளவுக்குத் தம் கருத்துக்களைக்கூட மாற்றிக் கொண்டிருக்கிறார்.''

(ஆ. வி. 8-9-63)

ஏதாவதொரு பிரச்னையில், தாம் விவாதித்த பிறகும் ராஜாஜியின் மனம் மாறவில்லை என்றால், தம் மனத்தை மாற்றிக் கொண்டாலும் கொள்ளாவிட்டாலும், ராஜாஜியின் நிலையை ஆதரித்தே எழுதுவார்; தம் வாதங்களைத் தாமே அடித்துத் தள்ளி ராஜாஜியின் வாதங்களை வலுப்படுத்தி எழுதுவார். அதுவே ராஜாஜி சம்பந்தப்பட்ட மட்டில் அவர் கொண்டிருந்த பிரசார நெறி.

சில சந்தர்ப்பங்களில், ராஜாஜியின் உணர்ச்சி சம்பந்தப்பட்டது என்ற காரணத்தால், அவருடைய நிலையைக் கல்கி மறுப்பின்றி ஒப்புக் கொள்வது உண்டு. உதாரணமாய், 1936யில், திருச்சி நகரசபைத் தலைவர் தேர்தலில், தம் யோசனைக்கு மாறாக டாக்டர் ராஜன் நடந்து கொண்டார் என்பதற்காக, காங்கிரஸிலிருந்து ராஜாஜி விலகிக் கொண்டார். அது பற்றிக் கல்கி எழுதினார் :

சாதாரணமாய்ச் சில விஷயங்களில் அவருடன் நான் விவாதம் செய்வதுண்டு ; எதிர்க் கட்சியை எடுத்துச் சொல்லுவேன். ஆனால் இப்போது ஒரு வார்த்தையும் எனக்குச் சொல்லத் தோன்றவில்லை. அறிவு உலகத்தைச் சேர்ந்த விஷயமாயிருந்தால், நாம் குறுக்கிட்டு ஏதாவது சொல்லலாம். இது, அறிவுக்கு மேற்பட்ட, இருதய சம்பந்தமான விஷயம்.

(ஆ. வி. 23-8-36)

இது நிற்க, மகாத்மா காந்தியும் ராஜாஜியும் முக்கியமானதாய்க் கருதிய தீண்டாமை விலக்கு, மதுவிலக்கு ஆகிய இரண்டுக்காகவும், இடையறாது பிரசாரம் செய்தார் கல்கி ; ''நவசக்தி'' நாட்களிலிருந்தே நேர்முகமாய்க் கட்டுரைகள் மூலமும், மறைமுகமாய்க் கதைகள் மூலமும் செய்தார். மற்றும், சமூகக் கேடுகளான பாலிய விவாகம், வரதட்சிணை, சாதி வேற்றுமை ஆகியவற்றை எதிர்த்தும், விதவை மறுமணத்தை ஆதரித்தும், பற்பலவாய்,




''என்னய்யா சோடாவில் கொஞ்சம்கூட ''காஸ்'' இல்லையே! சே! வெறும் தண்ணீர்!''

''என்னய்யா சோடாவில்'' தண்ணீர்''இல்லையே! சே! வெறும் காஸ்!''

— கருத்து : சுவாமி—

பலவிதமாய்க் கதை கட்டுரைகள் எழுதினார்.

நேர்முகமாய்க் கட்டுரைகள் மூலம் பிரசாரம் செய்வதை, செய்யும் உத்தியை, யாரும் தகாது என்று சொல்வதில்லை. ஆனால், ''கலைக்காகவே கலை'' என வாதிப்போர், கதைக் கலையைப் பிரசாரத்துக்குப் பயன்படுத்தலாகாது என்கிறார்கள். கலையிலே பிரசாரத்தைக் கலக்கலாமா என்னும் பிரச்னை பற்றிப் பலர் கருத்துத் தெரிவித்திருக்கிறார்கள். தற்காலச் சிறந்த நாவலாசிரியர்களில் ஒருவரும், கல்கி பத்திரிகையில் வெளியான ''வேங்கையின் மைந்தன்'' என்ற நாவலுக்குச் சாகித்திய அகாதெமி பரிசு பெற்றவருமான அகிலன் என்ன சொல்கிறார், பார்ப்போம் :

'கலை கலைக்காகவே' என்பது என்னைப் பொறுத்த வரையில் பொருள் புரியாத வாதம். மேலை நாடுகளில் சுமார் இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்பு தீவிரமாக அடிபட்டு இப்போது மறைந்து வரும் வாதம். இந்த நாட்டு இலக்கியக் கொள்கைக்கும், இலக்கிய மரபுக்கும் மதிப்பளிப்பவர்கள், 'கலை கலைக்காகவே' என்பதை ஒப்புக் கொள்ள மாட்டார்கள். 'பயனில சொல்லாதே!' என்று சொல்லிய வள்ளுவர், இதைப் படைப்புக் கலைஞனுக்கும் சேர்த்துச் சொல்லிய பயனுள்ள சொல் என்றே நான் நம்புகிறேன்.

ஆனால் அதே சமயம் கலைஞன் ஒரு பிரசாரகனும் அல்லன். குறிப்பிட்ட சில கருத்துக்களையோ, கொள்கைகளையோ ஒருவர் பிரசாரம் செய்ய விரும்பினால், தாராளமாக அவர் நேரடியாகவே கட்டுரைகள் எழுதலாம், அல்லது மேடையைப் பயன்படுத்தலாம், அல்லது வேறு எத்தனையோ பிரசாரக் கருவிகளைத் துணை கொள்ளலாம். நாவலை ஒரு கருவியாகப் பயன்படுத்த வேண்டியதில்லை....

தீமை என்று நான் எதைக் கருதுகிறேனோ அதற்கு எதிரே நின்று என் பேனாவால் போரி

# அன்றும் இன்றும் சிலருக்கு அதே இளந்தளிர் மேனி!




**பியர்ஸ் சருமக் களை...**
**கன்னிப் பருவக் களை**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்-PS. 54-140 TM

டத் துடிக்கும் கலைஞன் நான். என்றாலும், என் போர் முறைகூடக் கலை வடிவமாகிய நாவலின் கட்டுக் கோப்பை ஊடுருவியதாக இருக்க வேண்டும் என்று நான் நினைக்கிறேனே தவிர, அதை மீறிவிட நான் கூடிய வரை அனுமதிப்பதில்லை. சமயங்களில் எப்போதாவது கலைஞனாகிய என் கட்டுப்பாட்டையும் மீறி, எனக்குள்ளே உள்ள கருத்தாளன் வெளியே தலை நீட்டுவதும் உண்டு....

ஒவ்வொரு கால கட்டத்திலும் புதுப் புதுப் பிரச்னைகளும், தொல்லைகளும், துன்பங்களும், தீமைகளும் சமுதாயத்தில் ஏற்படுவது உண்டு. அவற்றை வெளிப்படுத்துவதும் அவற்றோடு பேனா முனையால் போராடுவதும் எழுத்தாளனின் கடமைகள் என்றே நான் கருதுகிறேன். ஆனால் அவன் கலைஞனாக இருந்துதான் போராட வேண்டும்.

(கதைக் கலை நூல்)

கல்கியைப் பொறுத்த வரை, அவருடைய ஆரம்ப காலக் கதைகளில் அப்பட்டமாய்ப் பிரசாரம் மேலோங்கி இருந்தது. பிந்தையக் கதைகளில், கதை அம்சமும் கலையழகும் மேலோங்கி நின்றன; அப்படி நின்று, அவர் சொல்ல நினைத்த கருத்துக்குப் பொருளையும் அழுத்தத்தையும் கொடுத்தன.

இப்போது பல புத்தகங்களிலும் கட்டுரைகளிலும் கல்கியின் எழுத்துக்களைப் பற்றிய மதிப்பீடு வந்துள்ளது. முதன் முதலாக அவருடைய எழுத்தைப் பற்றிய ஒரு மதிப்பீட்டுக் குறிப்பு, 1933ல் வெளியான புத்தகம் ஒன்றில் இடம் பெற்றுள்ளது. அதன் பெயர் ''தமிழ் இலக்கியம் — தற்காலம்.'' அதன் ஆசிரியர், அப்போது திருநெல்வேலியில் ''ஹிந்து'' நிருபராய் இருந்தவரும், தமிழ் அறிஞருமான ஏ. வி. சுப்பிரமணிய அய்யர்.

அந்தப் புத்தகத்துக்கு, ஒரு கட்டுரை வடிவில் கல்கி மதிப்புரை எழுதி, ஆ.வி. 1—5—33 இதழில் அதை வெளியிட்டார். அதன் தலைப்பு: ''வஸந்த காலம்'':

வஸந்த காலம் என்றதும் காளிதாஸனின் சாகுந்தல நாடகத்தில் வரும் வஸந்தகால வர்ணனை ஞாபகம் வரப் பெறாதவர் யார்? அந்த வர்ணனை ஞாபகம் வந்ததும் மாந்தளிர்களையும் மாம்பூக் கொத்துக்களையும் நினைத்துக் கொள்ளாதிருக்க முடியுமா? மாம்பூ ஞாபகம் வந்ததோ இல்லையோ, மாம்பழம் யாருக்குத் தான் ஞாபகம் வராமல் இருக்கும்? அதுவும் உயர்ந்த மல்கோவா பழத்தை நினைத்துக் கொண்டு விட்டால் நாவில் ஜலம் சொட்டப் பெறாதவர் யாரே உளர்?....

வஸந்த காலத்தின் இன்பத்தை அதிகமாக்குவது மந்தமாருதமாகும். இந்தக் காலத்தில் தெற்கு திக்கிலிருந்து வரும் இனிய பூங்காற்று உள்ளத்தையும் உடலையும் பரவசப்படுத்துகிறது. இளந் தென்றலின் சுகத்தை முழுதும் அனுபவிக்கிறவர்கள் கிராமவாசிகளே யாவார்கள். உடம்பை யெல்லாம் அநாவசியமான உடைகளால் மூடிக் கொண்டு நகரவாசிகளுக்குத் தென்றலின் இன்பம் எங்கே தெரியப் போகிறது?.... நகரவாசிகளிலும், ஆலைத் துணி அணிகிறவர்களைவிடக் கதர் உடை தரிப்பவர்கள் இந்த விஷயத்தில் பாக்கியவான்கள். சீமைத் துணியானது ஒரே அளவாக இயந்திரத்தில் நூற்ற நூலைக் கொண்டு நெருக்கமாய் நெய்யப்படுவதால் அதனுள் காற்று நுழைவதற்கு அணுவளவும் இடமில்லை..... கதரோ சமமில்லாத கை நூலால் விசாலமாக நெய்யப்படுவதால், துணி முழுவதிலும் காற்று நுழையக் கூடியதாகச் சிறிதான துவாரங்கள் பெற்றிருக்கிறது. ஆகையினால் தான் மிக மெல்லிய ஆலைத் துணி அணிந்தாலும் வியர்வை வியர்ப்பதையும், மிகவும் கனமாக கதர்த் துணி அணிந்தாலும் வியர்வை வியர்க்காமல் இருப்பதையும் காண்கிறோம்.

நேயர்களே! நான் தோல்வி அடைந்துவிட்டதை ஒப்புக் கொள்கிறேன்.

வஸந்த காலத்தைப் பற்றி ஏன் எழுத ஆரம்பித்தேன் தெரியுமா? சமீபத்தில் வெளியான ஒரு புத்தகத்தில் நான் படித்த பின் வரும் வாக்கியங்கள்தான் என்னை அவ்வாறு எழுதத் தூண்டின:

''பத்திரிகைகள் உண்டாக்கப்படும் அவசரத்தைக் கவனித்தால், அவைகளில் இலக்கியத் தன்மை இருப்பது அரிது. இருந்த போதிலும், தமிழில் நல்ல ஹாஸ்யச் சுவையுடனும் இலக்கியத் தன்மையுடனும் எழுதும் ''கல்கி'' என்பவர் இப்போது பத்திரிகைத் தொழிலில் இருந்து வருகிறார்..... நவீன நாகரிகத்தாலும் தேசிய இயக்கத்தாலும் மோதுண்ட தமிழரின் வாழ்க்கையைத் தமக்குப் பொருளாகக் கொண்டு, அதன் பல அம்சங்களின் வேடிக்கைகளையும், விநோதங்களையும், விபரீதங்களையும், எளிதாயும் நகைச் சுவை நிரம்பியதாயுமுள்ள ஒரு வசன நடையைக் கைக் கொண்டு, பல கட்டுரைகளில்



**'குளுகுளு' கூரை!**

நல்ல கடுங்கோடையில் வெளியே உட்கார்ந்து 'ஜில்ஜில்'லென்று சாப்பிட முடியுமா? முடியும் என்று செய்து காட்டி இருக்கிறார்கள் இரண்டு ஆர்மீனிய இஞ்சினியர்கள். தண்ணீர் ஊற்றைக் குழாய்கள் மூலம் மெல்லியதாகப் பீச்சி, வர்ண ஜாலம் நிறைந்த தண்ணீர்க் கூரை ஒன்றை அமைத்திருக்கிறார்கள் அவர்கள். அதன் அடியில் உட்கார்ந்தால் நீர் தெறிப்பதில்லை. குளுகுளுவென்ற காற்று மட்டும் கிடைக்கிறது!

நன்றி: 'கான்கிரீட் ஜர்னல்' அனுப்பியவர்: ஜெயஸ்ரீவிசுவநாத்

காட்டியிருக்கிறார். தமிழர் "கல்கி"யின் மூலம் நகைச்சுவை இன்னதென்று அறிந்து அநுபவித்து வருகிறார்கள். நகைச்சுவையுடன் எழுதக் கூடிய தமது சந்தர்ப்பத்தைப் பத்திரிகைகளுக்கு வேண்டிய அவசரத்துடனும் பரபரப்புடனும் பிரசார மனப்பான்மையுடனும் பல விஷயங்களைப் பற்றி எழுதுவதில் பூராவும் உபயோகப்படுத்தி விடாமல், நிரந்தர இலக்கியத் தன்மையுடன் கல்கி எழுத வேண்டும் என்று தமிழ் அபிமானிகள் எதிர்பார்ப்பார்கள்." ....

இப்போது தெரிகின்றதல்லவா? தமிழ் அபிமானிகளுக்கு ஏமாற்றமளிக்கக் கூடாதென்னும் எண்ணத்துடனே, பிரசார மனப்பான்மையின்றியும் நிரந்தரமான இலக்கியத் தன்மையுடனும் எழுத வேண்டுமென்று கருதித்தான் "வஸந்த கால" வர்ணனையைத் தொடங்கினேன். அது ஆலைத் துணியை விடக் கதர் ஏன் விசேஷமானது என்று காட்டுவதில் வந்து முடிந்தது.

ஆகையால், தமிழபிமானிகளே! பிரசார மனப்பான்மை இல்லாத நிரந்தரமான இலக்கியத் தன்மையுடன் கூடிய கட்டுரைகளைத் தயவுசெய்து என்னிடம் எதிர்பார்க்காதீர்கள். அத்தகைய கட்டுரைகளைத் தமிழ் நாட்டில் தோன்றப்போகும் நூற்றுக் கணக்கான, ஆயிரக் கணக்கான நவீன ஆசிரியர்களிடமிருந்து எதிர்பாருங்கள். நான் என்னமோ இத்தனை நாளும் பிரசாரத்துக்கென்று எழுதியே காலந் தள்ளிவிட்டேன். பாக்கியுள்ள காலமும் அப்படியே தள்ளிவிட்டுப் போகிறேன்.

எனவே, நேயர்களே! வஸந்த காலத்தில் கதர் அணியுங்கள். சுதேசியத்தையும் கடைப்பிடியுங்கள். மதுபானத்தை ஒழியுங்கள். தீண்டாமையை விலக்குங்கள்.

பாரத்மாதாகி ஜே! வந்தேமாதரம்!

"கல்கி என்பவர்" 1933ல் எழுதியது இது. இதற்குப் பிறகும், பிரசார மனப்பான்மையுடன் நிறைய எழுதத்தான் செய்தார்—அப்படி எழுதியதை, தேசிய இயக்கத்துக்கு அவர் செய்த பெரும் பணியாக மதிப்பிட வேண்டியது. ஆனால், தாமே வேடிக்கையாய்ச் சொல்லிக் கொண்டதைப் போல், அப்படி மட்டுமே எழுதிக் கொண்டு அவர் காலம் தள்ளவில்லை. நிலையான இலக்கியத் தன்மையுள்ளவற்றையும் தாமே எழுதினார்; நிறையவும் எழுதினார். அப்படி எழுதியது தமிழ் இலக்கியத்துக்கு அவர் செய்த பெரும் பணி.

கல்கியின் எழுத்துக்களை மொத்தமாய் மதிப்பிட்டுப் பார்த்தால், அவரை ஒரு "பிரசார எழுத்தாளர்" என வர்ணிப்பது தகாது. "தேசிய எழுத்தாளர்" என்பதே பொருத்தமான வர்ணனை. ஏனெனில் அவர் தேச பக்தியினால் எழுந்த எழுத்தாளர்; தேச பக்தியைப் பரப்பிய எழுத்தாளர்; தேச பக்தியின் அடிப்படையின் மேல் இலக்கியம் படைத்திட்ட எழுத்தாளர்.

(தொடரும்)

# உங்களது செல்வம் செழிக்க வழிகாட்டி
# இந்தியன் பாங்க்!

பிக்சட் டெபாசிட்
ரெக்கரிங் டெபாசிட்
ஓய்வுகாலத் திட்டம்
சீரான வருவாய் டெபாசிட் திட்டம்
கடனுதவி
கரண்ட் கணக்கு
அசன்தியா டெபாசிட் திட்டம்
சேமிப்புக் கணக்கு
INDIAN BANK

இன்று ஒருவரின் உற்ற துணைவன் அவரது பாங்க். ஏன், எங்களது சேவைகளையே எடுத்துக் கொள்ளுங்கள். உங்களது நிதிப் பிரச்னைகளை எங்களிடம் ஒப்படைத்தால், அவைபற்றி உங்களுக்கு மிக்க உதவிடும் வகையில் ஆலோசனை கூறுகின்றோம்.

உங்களுக்கு இன்னல் ஏதும் ஏற்படாதவாறு வழிகாட்டிச் செல்வோம்.
பல்வேறு சேமிப்புத் திட்டங்கள் மற்றும் சிறப்பான பாங்கிங் சேவை மூலம் சுபிட்சமான எதிர்காலத்தை உங்களுக்கு உத்திரவாத மளிக்கின்றோம்.




## இந்தியன் பாங்க்

(இந்திய அரசுக்கு முழுதும் சொந்தமானது)

தலைமை அலுவலகம்:
17 வடக்கு கடற்கரைச் சாலை, சென்னை-600 001

**இந்தியாவெங்கிலும் உள்ள கிளைகள் மூலம் உங்கள் நலனில் அக்கறை காட்டும் பாங்க்**

# கட்சி மாயும் பட்சி

கதை: குட்டி கிருஷ்ணன்

படம்: ராஜு

10






















நாட்கள் செல்லச் செல்லப்பட்சிக்கு மீண்டும் புகழாசை தலையெடுக்கிறது!
என்ன இது? பேப்பர்லே நம்ப பேரே வரமாட்டேங்குதே? பணம் பண்ணினால் போதுமா? நாலு பேருக்கு நாம் இருக்கோமா, செத்தோமான்னு தெரிய வேணாம்?


அச்சமயத்தில் கேடி சொக்கப் பனின் வழக்கமான விஜயம்.
என்ன தொரை! தேதி நாலாச்சு. நம்ம மாமூலை வாங்கிக்கிட்டுப் போகலாம்னு வந்தேன்.
வா சொக்கப்பா! உட்காரு, சரியான சமயத்துக்கு வந்தே!


என்ன மரியாதை பலமா இருக்கு?


இதப்பாரு, மாசம் ஐந்நூறும் அஞ்நூறும் வாங்கிக்கிட்டுப் போறியே, என்ன பிரயோசனம்? குதிரைப் பந்தயம் இல்லாமலே ஜாக்பாட் அடிக்கலாம்! சுளையா பத்தாயிரம்! என்ன சொல்றே?
என்னை வம்பிலே மாட்டி வைக்கப் பார்க்கிறியா? நடக்காது நயினா!




சேச்சே! வம்பு தும்பு ஒண்ணுமில்லே. சின்ன விஷயம். நடு நிசி; இருட்டுச் சந்து; உன் பிச்சுவாவினால் என் உடம்பில் இரண்டு சதக், சதக்!
அடப்பாவி! கொலை பண்ணவா சொல்றே! அது சின்ன விஷயமா உனக்கு?

தொடரும்

For the first time in the world

# A fairness cream that works without bleaching

Never before in the world has there been a product that has been able to effect fairness without bleaching. Till now, trying to make the skin fairer has always been a chancy business. Using a bleach to lighten the skin is known to be harmful, particularly if used frequently, owing to its harsh characteristics.

**Fair & Lovely is a scientific breakthrough that works two ways**

**1. It has a vitamin that works from the inside**




The vitamin enters the skin as you apply the cream. You can feel it working as you smooth it in ... gently reversing the spreading of skin-darkening. With regular application through a period of six weeks you will notice the difference. And so will others.

**2. It has sun screen agents to protect from outside**

Fair & Lovely protects the skin by filtering out those sun rays that cause skin darkening.

**Fair & Lovely a fairness cream ... and more**

Use it as a vanishing cream under make-up, at least once a day, twice for best results. Regular use of Fair & Lovely will ensure that you keep your complexion as fair as you want it to be.

*Fair & Lovely* – the gentle way to a fairer skin

A Quality product of Hindustan Lever

LINTAS.FALOV.6-140



# வட்டமேஜை



சமீபத்தில் மத்தியஅரசின் செய்திப் படத்தினைப் பார்க்க நேர்ந்தது. அதில் ஒரு பெண்மணி பத்து ரூபாயினைக் கடைக்கு எடுத்துச் சென்று பொருள்கள் வாங்கிக் கொண்டு திரும்புகிறார். வீட்டுக்கு வந்து பொருள்களைக் கொட்டிவிட்டு இவ்வளவு பொருள்கள் வாங்கிய பிறகும் கையில் மீதிப் பணம் இருப்பதைப் பார்த்து ஆச்சரியப்படுவது போல் காட்டப்படுகிறது. உண்மை நிகழ்ச்சியினைத் தொகுத்து வழங்க வேண்டிய செய்தித் துறையினர் இந்திரா அரசில் விலைவாசி இறங்கிவிட்டதுபோல் உண்மைக்குப் புறம்பாகக் காட்டியிருப்பது கண்டனத்துக்கு உரியதாகும். இறைவா, உண்மையையும், இந்தியாவையும் காப்பாற்று !

சென்னை — 41
30—5—75 ந. வே. பாலசுப்பிரமணியன்

'இப்படியும் ஒரு பெண்' படத்தின் விமர்சனத்தில் குறிப்பிட்டிருப்பது போல் வஸந்தா புதுப் பின்னணி பாடகி அல்ல. ஏழு ஆண்டுகளுக்குமுன் திரைக்கு வந்தவர் முதலில் பாடிய படம் 'தாயே உனக்காக!' — கண்ணதாசன் பாடல், 'ஏகநாதர் பேசினால் என்ன பேசுவார்' என்ற பாடல். அதன் பிறகு வஸந்தா தமிழ், தெலுங்கு, மலையாளம் ஆகிய மூன்று மொழிப் படங்களிலும் இது வரையில் 360 பாடல்கள் பாடியிருக்கிறார்.

சென்னை — 33
29—5—75 அன்பு

"ஹலோ கம்ப்யூட்டர்" என்ற கட்டுரை படித்தேன். படிக்கும்போது டெலிபோன் பில்களில் எந்தத் தவறும் ஏற்பட நியாயமில்லை எனவும், தவறு ஏற்படாமலிருக்க எல்லாவித முன்னேற்பாடுகளும் செய்யப்படுவதாகவும் தோன்றுகிறது.

என் விஷயத்தில் 1—3—74 தேதியிட்ட பில் 299.40 கொடுக்க வேண்டியதாகக் குறித்தது. புதிய, அதிகரிக்கப்பட்ட கட்டணம், அதிக வாடகையைச் சேர்த்தால் கூட இந்த அளவு வர நியாயமில்லை. ஏனெனில் அநேகமாக அதற்கு முந்திய எந்த பில்லும் ரூ. 200ஐ எட்டுவது அபூர்வம். இருந்தும் அவகாசமின்மை காரணமாக வாளாவிருந்தேன்.

ஆனால் துரதிருஷ்ட வசமாக அதற்கு அடுத்த பில் 1—6—74 ரூ. 775.15க்கு வந்தபோது நான் சும்மா இருப்பது ஆபத்து என அறிந்தேன். எவ்வளவு எழுதியும் 'நீ எஸ்.டி.டி. போட்டிருப்பாய்' எனவும் 'எங்கள் மீது தவறு இல்லை' எனவும் கூறிவிட்டார்கள். அவர்கள் கூறுவது போல் முந்தைய நான்கு பில்களை வைத்துச் சோதித்திருந்தால் தவறு வர நியாயமில்லையே?

சென்னை—1
9—5—75 ராமானுஜம்

நிலயங்கத்தில் மத்திய அரசு இந்தியைத் திணிப்பதாகக் கூறியுள்ளீர்கள். தமிழ் நாடு அரசே தமிழை ஆங்கிலத்துக்குப் பதிலாக எல்லா வகையிலும் திணிக்கும்போது அதனால் வருந்தித் திணிப்பை எவ்வாறு கண்டிக்க முடியும்? உதாரணத்துக்கு ஒன்று: ஒரு மாணவர் எஸ். எஸ். எல். ஸி. வரை தமிழ் படித்து, தமிழில் பயின்ற பின்னர் எக்காரணத்தினாலோ பட்ட அளவில் தமிழ் எடுத்துக்கொள்ளாது பி. ஏ., பி. எஸ்.ஸி. பட்டம் வாங்கி இருப்பாரானால் அவருக்குச் சென்னை பல்கலைக் கழகத்தில் பி.இட். பயில இடம் கிடையாது. ஒரு சமயம் ஆங்கிலம் பயிற்சி மொழியாகக் கொண்ட பிரிவில் சேர்ந்து பி.இட். பட்டம் பெற்றிருந்தாலும் அவருக்குத் தமிழைப் போதனை மொழியாகக் கொண்ட பள்ளிகளில் வேலை கிடையாது. எஸ்.எஸ்.எல்.ஸி. வரை பாடம் நடத்த பி.ஏ. தமிழா வேண்டும் ?

மேலப்பாளையூர்.
29—5—75 எஸ். மகாலிங்கம்

இரண்டு வாரங்களாகத் தவறுதலாக ராக்ஷஸ வருடம் என்று போட வேண்டிய இடத்தில் ஆனந்த வருடம் என்று போட்டு வருவதைக் கவனிக்கவும்.

உடுமலைப்பேட்டை
19—5—75 பி. ஆர். மாணிக்கம்

அடுத்த இதழில்...

டாக்டருக்கு ஆபத்து!
வியப்பூட்டும் விஷயங்கள்

மாம்பழ ஜோக்ஸ்!

சிறுகதை:
"அன்னையம்மா!"
குயிலி ராஜேஸ்வரி.

## திருமண காலங்களுக்கு ஏற்ற பட்டுப் புடவைகளை தேர்ந்தெடுக்க-வண்ணத்துப் பூச்சி!

**பட்டு ரகங்களுக்கு 20% சிறப்புத் தள்ளுபடி ஜூலை 15-'75 வரையில் வழங்கப்படும்.**

(திருமண கால விசேட சிறப்புத் தள்ளுபடி)




**15-7-'75 வரை**
**பருத்தி வகைகளுக்கு 10% விகிதமும் மொத்த வியாபாரிகளுக்கு 15% சதவிகித கமிஷனும் வழங்கப்படும்.**



எர்ணாகுளத்தில் 'மேகலா,, பெங்களூர் கவல்ரி ரோட், விஜயவாடா கவர்னர்பெட், பம்பாய் டாக்டர் டி.என். ரோடில் உள்ள அஜந்தா மற்றும் மாதுங்கா, சியான் சர்க்கிள், இந்தியா அவுஸ் ஆகிய இடங்களிலுள்ள கோ-ஆப்டெக்ஸ் விற்பனை நிலையங்களுக்கு வருகை தரவேண்டுகிறோம்.

CO 3197 TMB

# எலி ஜோக்ஸ்!







கருத்து: தரஜா
படம்: செல்வம்


















## 10

கபூர் 'கிளப்'புக்குப் போனபோது மணி ஏழரை இருக்கும். அவர் வீட்டுக்குப் போக விரும்பவில்லை. மத்தியானம் மோகினி, அவர் தம் அலுவலகத்தை விட்டுப் போன பிறகு, உத்தேசமாக அவர் போகக் கூடிய இடங்களுக்கெல்லாம் ஃபோன் செய்து, கடைசியில் அவர் இருந்த நிறுவனத்தைக் கண்டுபிடித்து ஃபோனிலேயே கொட்டித் தீர்த்து விட்டாள். விஜயா தொடர்ந்து வேலையில் இருந்தாளானால், நாளைக்கு ஆபீசுக்கே வந்து கூப்பாடு போடப் போவதாகப் பயமுறுத்தியிருக்கிறாள். அவளை என்ன செய்வது? — இந்த விஷயத்தில் அடிபணிந்து போய்விடக்கூடாது. என்ன நடந்தாலும் சரி....

கிளப்பில் ரத்தன் லால் அவர் வருகைக்காகக் 'காத்துக் கொண்டிருந்தான். அவனுடன் ஒரு பெண் உட்கார்ந்திருந்தாள். அவன் கபூரைப் பார்த்ததும் கையை உயர்த்தி அவரைக் கூப்பிட்டான்.

கபூர் அவனருகில் போய் உட்கார்ந்தார்.

''மிஸ் ஷம்மீன், மிஸ்டர் கபூர்'' என்று அறிமுகம் செய்து வைத்தான் ரத்தன்லால்.

ஷம்மீனுக்கு இருபத்தைந்து வயது இருக்கலாம். மிக எளிமையாக, ஆடம்பரம் இல்லாமல் அலங்காரம் செய்து கொண்டிருந்தாள். பார்ப்பதற்குக் கண்ணியமாக இருந்தாள். ரத்தன்லாலுக்கு இத்தகைய பெண்களைக் கூடத் தெரியுமா என்பது கபூருக்குச் சற்று ஆச்சரியமாக இருந்தது.

''ஷம்மீன் கஸல் பாடுவதில் 'எக்ஸ்பர்ட்''' என்றான் ரத்தன்லால்.

'' 'எக்ஸ்பர்ட்' ஒன்றுமில்லை. சுமாராகப் பாடுவேன்'' என்றாள் ஷம்மீன்.

ரத்தன்லால் இவ்வளவு சுறுசுறுப்பாக இருக்கிறானே என்று நினைத்தார் கபூர். இவள் கஸலைக் கேட்க வேண்டுமென்றால் எங்கே போய்க் கேட்பது? — ரத்தன்லாலுடைய ஃப்ளாட்டுக்குத்தான் போக வேண்டும். அப்படிப் போனால் மோகினி அங்கு மீண்டும் இன்றிரவு வந்தாலும் வரக் கூடும்...

''மிஸ்டர் கபூருக்கு 'கஸல்' என்றால் உயிர்'' என்றான் ரத்தன்லால்.

''உயிர் ஒன்றுமில்லை. நன்றாகப் பாடினால் கேட்பேன்'' என்றார் கபூர்.

ஷம்மீன் சிரித்தாள். அவள் சிரிக்கும் போது கன்னம் குழிவடைந்து பார்ப்பதற்கு இன்னும் அழகாக இருந்தாள்.

''உனக்கு எந்த ஊர்?'' என்று கேட்டார் கபூர்.

''அலிகார்'' என்றாள் ஷம்மீன்.

''டில்லியில் வேலையாயிருக்கிறாயா?''

அரசாங்கத்துக்குச் சொந்தமான ஒரு ஹோட்டல் பெயரைச் சொல்லி, அங்கு 'கஸல்' பாடுவதாகச் சொன்னாள்.

''நான் உத்தியோகபூர்வமாக விருந்து கொடுக்கும்போதெல்லாம் ஷம்மீனைத்தான் பாடக் கூப்பிடுவது வழக்கம்'' என்றான் ரத்தன்லால்.

''என்னை இப்பொழுது கூப்பிடுகிறாயே, இது உத்தியோகபூர்வமாக இல்லாவிட்டால்?'' என்று கேட்டார் கபூர்.

''இது பிரத்தியேகமான தனிப்பட்ட விருந்து....'' என்று சொல்லிவிட்டுச் சிரித்தான் ரத்தன்லால்.

''கச்சேரியை எங்கே வைத்துக்கொள்ளலாம்?'' என்று கேட்டார் கபூர்.

''ஏன், என் வீட்டுக்குப் போகலாமே?'' என்றான் ரத்தன்லால்.

'' வேண்டாம். வேறு எங்கேயாவது போவோம்.''

''ஓ...ஐ ஸீ...! நேற்றிரவுச் சம்பவம் மீண்டும் நிகழக்கூடும் என்ற பயமா?'' என்று கேட்டுவிட்டுப் பலமாகச் சிரித்தான் ரத்தன் லால்.

''எனக்கு எந்தப் பயமும் இல்லை. நீ இப்படிச் சிரிப்பதுதான் எனக்குப் பிடிக்கவில்லை'' என்றார் கபூர்.

''ஐ ஆம் ஸாரி... எந்த நிகழ்ச்சியிலும் அதிலுள்ள நகைச்சுவையைப் பார்ப்பதுதான் என் இயல்பு...''

''நீ என் மனைவியின் கணவனல்ல என்ற காரணத்தினால் இதில் உன்னால் நகைச் சுவையைப் பார்க்க முடியும். ஆனால் என்னால் முடியாது'' என்றார் கபூர்.

'' சொல்வதற்கு மன்னிக்க வேண்டும். நீங்கள் மிஸஸ் கபூருடன் இத்தனை வருஷங்கள் குடும்பம் நடத்தியும் பைத்தியம் பிடிக்காமல் இருக்கிறீர்களே, இதற்கே உங்கள் நகைச்சுவை காரணமாக இருக்க லாம்'' என்றான் ரத்தன்லால்.

''அவருடைய குடும்ப வாழ்க்கையைப் பற்றி நீங்கள் இப்படிச் சர்வ சாதாரணமாக விவாதிப்பது நன்றாக இல்லை'' என்றாள் ஷம்மீன்.

''நான் என் குடும்ப விவகாரம் பற்றிய எலும்புகள் பத்திரமாய் அலமாரிக்குள் இருக் கின்றன என்று நினைத்தேன். ஆனால் இது இங்கே கிளப்பில் சீட்டாடவும் குடிக்கவும் வருகின்றவர்களுக்கு இன்னொரு பொழுது போக்காகப் படிப்பதற்கு என்று அமைந்த ஒரு சிறந்த புத்தகம் என்று இப்பொழுது தான் புரிகிறது'' என்றார் கபூர்.

''மனிதர்களைப் பற்றிய — அதுவும் சமூ கத்தில் பிரபலமாக உள்ளவர்களுடைய அந்தரங்க விஷயங்களை அறிவதைக் காட்டி லும், வாழ்க்கையில் வேறு என்ன சுவாரசி யம் இருக்கிறது? — பாருங்கள்... நேற்றிரவு என் வீட்டுக்கெதிரே இருக்கும் குடிசையில் ஒரு கொலை நடந்தது. ஒரு நகரசுத்தி தொழி லாளி போல் இருக்கிறது. குடித்துவிட்டு வந்திருக்கிறான். மனைவி வேறு யாருடனோ மிகவும் சந்தோஷமாகக் குடிசைக்குள் இருந் திருக்கிறாள்... மனைவியை அந்த இடத்தி லேயே வெட்டிப் போட்டு விட்டான் கண வன். இது செய்தித் தாளில் வரவேயில்லை. ஆனால் நீங்கள் உங்கள் மனைவியைக் கொல்வ தாக வைத்துக் கொள்ளுங்கள்...'' என்று ரத்தன் லால் சொல்வதற்குள் ஷம்மீன் இடைமறித்தாள். ''ப்ளீஸ்... அசட்டுத்தன மாகப் பேசுவதை நிறுத்துங்கள்.''

''நான் அப்படிக் கொல்ல வேண்டும் என் பதுதான் உன் யோசனையா?'' என்றார் கபூர்.

''இது மிகவும் சாமர்த்தியமாகச் செய்யப் பட வேண்டிய விஷயம். ஒரு பொது இடத்தி லிருந்து கொண்டு இதைப் பற்றி விவா திப்பது தர்ம விரோதம்.''

'' 'மனைவிகளைக் கொல்வது எப்படி' என்பது பற்றி ஒரு புத்தகம் எழுதப் போகிறாயா?''

''குழந்தைகளே இல்லாதவர்கள் 'குழந்தை வளர்ப்பது எப்படி?' என்று புத்தகம் எழுதும் போது நான் ஏன் 'மனைவிகளைக் கொல்வது எப்படி?' என்று புத்தகம் எழுதக் கூடாது?'' என்று கேட்டுவிட்டுச் சிரித்தான் ரத்தன் லால்.

''இப்படிப் பேசிக் கொண்டே இருந்தால் பேசிக் கொண்டே இருக்க வேண்டியதுதான். எங்கே போகலாம் சொல், ஷம்மீனின் கலைக் கேட்க?'' என்று வினவியவாறு எழுந்திருந் தார் கபூர்.

ரத்தன்லால் ஒரு பெரிய ஹோட்டலின் பெயரைச் சொன்னான்.



''ஹோட்டலுக்கா?'' என்று சற்றுத் திடுக்கிட்டவாறு கேட்டார் கபூர்.

''ஏன்? அதில் என்ன தப்பு?''

''நீ எங்கே வசிக்கிறாய்?'' என்று ஷம்மீனைப் பார்த்துக் கேட்டார் கபூர்.

''நான் ஃபத்தேபூரில் இருக்கிறேன். ஆனால் என் வீடு சௌகரியப்படாது. பெரிய குடும்பம்'' என்றாள் ஷம்மீன்.

''நான் போய் ஃபோன் செய்து அறைக்கு ஏற்பாடு செய்கிறேன்'' என்று எழுந்து சென்றான் ரத்தன் லால்.

''ஹோட்டலுக்குப் போவது உங்களுக்குப் பிடிக்காவிட்டால் நிகழ்ச்சியை ரத்து செய்வோம்'' என்றாள் ஷம்மீன்.

''நோ... நோ... அதற்கில்லை... சரி, போவோம்'' என்றார் கபூர்.

சிறிது நேரம் அங்கு அமைதி நிலவியது. ஷம்மீன் சுற்று முற்றும் அந்த ஹாலில் இருந்தவர்களை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''ரத்தன்லாலை உனக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்டார் கபூர்.

''என் தொழிலிலோ அல்லது ரத்தன் லாலின் தொழிலிலோ ஒருவரை யொருவர் சந்திக்காமல் இருக்க முடியாது'' என்றாள் ஷம்மீன்.

அவள் வெளிப்படையாகவே பேசியது, கபூருக்கு மிகவும் பிடித்திருந்தது.

''மிஸ்டர் கபூர், வாட் எ ஸர்ப்ரைஸ்!'' என்று கேட்டுக்கொண்டே வந்தார் அத்வானி.

அத்வானி கபூர் அருகே காலியாயிருந்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டார். ஷம்மீனை அவர் பார்க்காதது போலிருந்தது. அவர் வேண்டுமென்றே வரவழைத்துக் கொண்ட ஒரு பாவனையாகக் கபூருக்குப் பட்டது.

''மிஸ் ஷம்மீன்.... மிஸ்டர் அத்வானி'' என்று ஒருவரை யொருவர் அறிமுகம் செய்து வைத்தார் கபூர்.



''மிஸ் ஷம்மீன் ஆஃப்...?'' என்று கேள்விக் குறியுடன் பார்த்தார் அத்வானி.

''ஆஃப் அலிகார்'' என்றார் கபூர்.

''ஐ ஸீ'' என்று சொல்லிக் கொண்டே அவளை ஏற இறங்கப் பார்த்தார் அத்வானி.

அத்வானி ஒரு சுருட்டைப் பற்ற வைத்துக் கொண்டே ''ஹாவ் எ ட்ரிங்?'' என்று கபூரைக் கேட்டார்.

''நோ... ப்ளீஸ்... வெளியில் போக இருக்கிறோம்.''

அத்வானி பதில் பேசாமல் மறுபடியும் ஷம்மீனைப்பார்த்தார். அவள் கீழே குனிந்து கொண்டு மேஜையை ஆள் காட்டி விரலால் தட்டினாள்.

ரத்தன்லால் வந்தான். அத்வானியைப் பார்த்து, ''ஹல்லோ...'' என்றான்.

''போகலாமா?'' என்று கேட்டார் கபூர்.

''எஸ்... போகலாம்.''

மூவரும் கிளப்பை விட்டு வெளியே வந்தார்கள். ''அதே ஹோட்டல்தான்... ஏற்பாடு செய்து விட்டேன்'' என்றான் ரத்தன் லால்.

ஹோட்டல் அறைக்குள் சென்றதும் கபூர் சோபாவில் உட்கார்ந்து கொண்டார். அவரெதிரே ரத்தினக் கம்பளத்தில் கீழே உட்கார்ந்து கொண்டாள் ஷம்மீன்.

''கஸலை அப்படியே கேட்கலாமா? சாமக்கிரியைகள் வேண்டாமா?'' என்று கேட்டான் ரத்தன்லால்.

''உனக்கு வேண்டுமானால் சொல்லிக் கொள். எனக்கு வேண்டாம்'' என்றார் கபூர்.

''நோ... மூன்று பேருக்கும் வேண்டும்'' என்று சொல்லிக் கொண்டே ஃபோன் செய்ய ஆரம்பித்தான் ரத்தன்லால்.

சிறிது நேரத்துக்கெல்லாம் ஒருவன் ஸ்காட்ச், ஜின், சோடா சகிதமாக உள்ளே நுழைந்தான்.

ஸ்காட்சைத் தனக்கும் கபூருக்குமாகத் தம்ளரில் ஊற்றிக் கொண்டு, ஜின்னை ஒரு தம்ளரில் ஊற்றி ஷம்மீனுக்குக் கொடுத்தான் ரத்தன்லால்.

ஷம்மீன் 'கஸல்' பாட ஆரம்பித்தாள்.

அவள் குரல் மிகவும் நன்றாக இருந்தது. அவள் ஏன் சினிமாவுக்குப் பாடப் போகவில்லை என்று தோன்றிற்று கபூருக்கு. பல வருஷங்களை உதறித் தள்ளிய சந்தோஷத்தில் அவர் அவள் குரலில் தம்மைக் கரைத்துக் கொள்ள ஆரம்பித்தார். ரத்தன்லால் அவருடைய தம்ளரை நிரப்பிக்கொண்டே இருந்தான்.

'வாழ்க்கை என்னும் கோப்பையிலுள்ள இன்ப மதுவைக் கடைசித் துளிவரையில் சுவைக்கத் துடிக்கும் இளைஞன் நான். நான் தனி ஆள்... எனக்குக் கல்யாணம் ஆகவில்லை. குழந்தை குட்டிகள் இல்லை. நான் ஒரு பொருளாதார மேதையல்ல, மிகச் சிக்கலான பிரச்னைகளையும் தெளிவாகப் புரிந்துகொண்டு தீர்வு காணும் நிபுணன் அல்ல. சதையும் இரத்த ஓட்டமும் உள்ள ஓர் ஆதார.. லௌகிக மனிதன்...'

கபூர் கண்களைத் திறந்தபோது அங்கு ரத்தன்லால் இல்லை. ஷம்மீன் அவர் அருகில், மிக அருகில் சோபாவில் உட்கார்ந்திருந்தாள்.

''பாட்டு எப்படி இருந்தது?''

கபூருக்கு உடல் வியர்த்திருந்தது. அவள் தன் கைக்குட்டையினால் அவர் நெற்றியைத் துடைத்தாள். அவர் அவள் கையைப் பிடித்துக்கொண்டார்....

கபூர் கண் விழித்தபோது பொழுது புலர்ந்திருந்தது. ஷம்மீன் இன்னும் உறங்கிக்கொண்டிருந்தாள்.

கபூர் குளியலறைக்குச் சென்று திரும்பிய போது ஷம்மீன் எழுந்து விட்டாள். கட்டிலில் உட்கார்ந்தவாறே சோம்பல் முறித்துக் கொண்டிருந்தாள்.

''குட் மார்னிங்...'' என்றார் கபூர்.

''மன்னிக்கவும். 'எழுந்திருக்க நேரமாகி விட்டது'' என்றாள் ஷம்மீன்.

''பரவாயில்லை. நீ இங்கேயே இருக்கலாம். நான் போக வேண்டும்.''

''நான் இங்கேயே இருப்பதா?''

''ஆமாம். உன் கலையை நான் தொடர்ந்து கேட்க வேண்டும் போலிருக்கிறது.''

''இந்த அறையை ரத்தன்லால் ஒரு நாளைக்குத்தான் ஏற்பாடு செய்தார் என்று நினைக்கிறேன்.''

''அதைப் பற்றி நீ கவலைப்படாதே. நீ தொடர்ந்து இங்கிருக்கலாம், உனக்கு அலுக்கும்வரை.''

''அலுப்பு எனக்கா, உங்களுக்கா?'' என்று சிரித்துக்கொண்டே கேட்டாள் ஷம்மீன்.

''நான் கிழவன்... எனக்கு அலுக்காது. உனக்குத்தான்...''

''நீங்கள் கிழவன் இல்லை என்று நான் நற்சாட்சிப் பத்திரம் தர வேண்டுமா?''

இருவரும் சிரித்தார்கள்.

கபூர் காரில் போய் உட்கார்ந்ததும் அவரை எதிர்நோக்கிய முதல் பிரச்னை: இப்பொழுது மோகினியைச் சந்தித்தாக வேண்டும். நேற்று காலை வீட்டிலிருந்து புறப்படும் போது அவளோடு சண்டை போட்டதுதான். அப்புறம் அவளோடு ஃபோனில் கூடப் பேசவில்லை. இரவு முழுவதும் அவள் என்னைத் தேடிக் கொண்டிருந்திருப்பாள். ரத்தன்லாவின் விடுதிக்குச் சென்றிருக்கக் கூடும். 'கிளப்'புக்குப் போய் விசாரித்திருப்பாள். ஷம்மீனைப் பற்றி இதற்குள் அவளுக்குத் தகவல் எட்டியிருக்கலாம். 'யார் அப்பெண்?'-மோகினியின் குரல் இதோ ஆவேசமாக என் காதருகே ஒலிக்கிறது. நான் சொல்லப் போவதில்லை. எனக்கென்று ஒரு புனிதமான அந்தரங்கம் வேண்டும். ஷம்மீன் யாரென்றும் நான் கவலைப்படவில்லை. என் அந்தரங்கம்தான் புனிதமானது!

நான் எதற்காகப் பயப்பட வேண்டும்? எனக்கென்று ஒரு தனி உருவம் இருக்கிறதென்று மோகினி உணர வேண்டும். நேற்றிரவு அந்த அநுபவம் என்னை மனிதனாக்கியிருக்கிறது. நான் கோழையில்லை. மானஸிகங்கள் யதார்த்தமாகிவிட்டதனால் ஏற்பட்டுள்ள வீரம்... நேற்று மோகினியிடம் பதிலுக்குப் பதில் கொடுத்தபோது, என் மகன் என்னை எப்படிப் பாராட்டினான்! என் குழந்தைகள் மதிப்பில் நான் உயர்ந்து விட்டேன். இன்னும் உயர்ந்து கொண்டே போக வேண்டும். அத்வானி மற்றவர்களிடம் சொல்லிக் கொண்டிருப்பார்.

'கபூருக்கு இந்த வயசில் ஏன் புத்தி பேதலித்துப் போக வேண்டும்? ரத்தன்லால் கூட்டி வந்த பெண்ணோடு... சே!' எனக்கு வயசு ஆகவில்லை... வயசு குறைந்து கொண்டே போகிறது.... ஷம்மீனே நற்சாட்சிப் பத்திரம் வழங்கிவிட்டாள். இந்த நற்சாட்சிப் பத்திரம் நான் கொடுத்த, கொடுக்கப் போகின்ற பணத்துக்காகவும் இருக்கலாம்... இதைப் பற்றி ஏன் நினைக்க வேண்டும்? ஷம்மீன் மனப்பூர்வமாகச் சொன்னாள் என்று நினைப்பதுதான் எனக்குப் பிடித்திருக்கிறது...

கபூர் வீட்டை அடைந்தபோது மோகினியின் கார் 'போர்டிகோ'வில் நின்று கொண்டிருந்தது. அவள் வீட்டில் இருக்கிறாள். வெளியே புறப்பட ஆயத்தமாக இருக்கிறாள் போலிருக்கிறது.

அவர் ஹாலில் நுழைந்தபோது வீடு நிசப்தமாக இருந்தது.

''மான் சிங்!'' என்று கூப்பிட்டார்.

மோகினி வந்தாள். அவரை ஏற இறங்கப் பார்த்தாள். ஒன்றும் பேசவில்லை.

''மான்சிங்கைக் கூப்பிடு. எனக்கு 'டீ' வேண்டும்'' என்றார் கபூர்.

''யார் அந்தப் பெண்?''

அவர் சோபாவில் உட்கார்ந்து கொண்டு மடித்து வைக்கப் பட்டிருந்த தினசரித் தாளைப் பிரித்துப் படிக்கத் தொடங்கினார்.

திடீரென்று தாம் உலுக்கப்படுவதை அவர் உணர்ந்தார். ''ஹூ ஈஸ் தட் பிட்ச்?'' மோகினியின் குரல் உரக்க ஒலித்தது.

அவர் அவளை உதறிக் கொண்டு எழுந்தார். நிதானமாகக் கேட்டார். ''யு மீன் தி அதர் பிட்ச்?''

''வீட்டை விட்டு வெளியே போங்கள். இந்த வீட்டில் உங்களுக்கு இடமில்லை.''

''இதைச் சொல்ல நீ யார்?''

''என் தந்தையின் பணம்தான் இந்த அளவுக்கு உங்களை உயர்த்தியிருக்கிறது. இல்லாவிட்டால் தெருவில் பிச்சை எடுத்துக் கொண்டிருப்பீர்கள்.''

''நான் இப்பொழுது உன்னை வீட்டை விட்டு விரட்டினால் அதைத்தான் நீயும் செய்யும்படியாக இருக்கும்.''

''நான் எதற்காகப் பிச்சை எடுக்க வேண்டும்? நான் பிச்சைக்காரக் குடும்பத்தில் பிறந்தவள் அல்ல.''

''ஓ!... உனக்குப் பணக்கார நண்பர்கள் இருக்கிறார்கள் என்கிறாயா? அதுவும் வாஸ்தவம்தான்.''

''ஆமாம். எனக்குப் பணக்கார நண்பர்கள்தான் இருக்கிறார்கள். உங்கள் மாதிரி கேடுகெட்டுப் போய்விடவில்லை. ஜி. பி. ரோடுக்குப் போவது, தெருவில் கண்ட பெண்களைக் கூப்பிட்டுக் கொண்டு போய் இரவு முழுவதும் தங்குவது... வீட்டு வேலைக்கு வந்த நாயை ஆஃபீஸில் சீராட்டுவது... உங்கள் மகன் எப்படி இருப்பான்? — அந்த நாயைத் துரத்திக் கொண்டு போய், வீட்டை விட்டு வெளியேறி விட்டான்.... எங்கள் வீட்டு இரத்தம் அவனுக்குள் ஓடிக்கொண்டிருந்தால் இப்படிச் செய்திருப்பானா?...'' மோகினி அடுக்கிக் கொண்டே போனாள்.

ராகேஷ் விஜயாவுக்காக வீட்டை விட்டு வெளியேறி விட்டானா? — இந்தச் செய்தி அவருக்கு அதிர்ச்சியைத் தந்தது. (தொடரும்)

## தகுதி-மூலதனம் - அரசியல்வாதி

வேலை வேண்டும்; என்ன செய்வது?
எனக்கோர்
வேலை வேண்டும்; என்ன செய்வது?
கட்டிடம் அமைக்கும்
கலையில் தேற
பொறியியல் துறையில் பட்டம் வேண்டும்
நோய்கள் நீக்கும்
நுண்கலை சிறக்க
மருத்துவத் துறையில் பட்டம் வேண்டும்
மாணவர் இதயம்
வளமுறப் பயிற்ற
போதனைத் துறையில் பட்டம் வேண்டும்
எவ்வகைத்
துறையிலும்
இறங்கிட
அதற்கோர்
தகுதி வேண்டும்; பட்டம் வேண்டும்
தகுதி பட்டம் ஒன்றும்
கையில் இல்லையே என்ன செய்வது?
சொந்தமாய்த் தொழில் செய்வோமா?
கையில் பணம் வேண்டுமே?
ஆ!
எனக்கேற்ற வேலை இதோ!
அரசியல்வாதி - ஆம்
தகுதி வேண்டாம்; பட்டம் வேண்டாம்
எளிதில் கிடைக்கும் வேலை
முதல் இல்லாமல்
அதிக வருமானம்
ஐயகோ! அடடா!
அதற்குமோர் தகுதி வேண்டுமே
அதற்குமோர் முதல் வேண்டுமே
ஆமாம்
பொய் வேண்டும் அதுதான்
அதற்கு மூலதனம்
நேர்மை யின்மை
ஒழுக்க மின்மை
சுயநலம்
ஜாதிப் பித்து
ஏமாற்று வேலை
நாளுக்கோர் பேச்சு
ஆளுக்கோர் நீதி
இன்னும் எவ்வளவோ தகுதிகள்
இவைகள் யாவும் என்னிடம் இல்லையே!

— ஜான் பீட்டர்



## பசுமைப் புரட்சி !

புரட்சி.....புரட்சி....
எங்கள் கிராமத்து
ஊர்க் கோடியில்
வண்ண விளம்பரத்தில்
பெரிய பலகையில்
வயல் பார்க்காத
பட்டணத்து....சினிமா நடிகை
மேலாக்கை இடுப்பில் கட்டி
நாற்று நடுகிறாள்....!

— வி. பாலமீனாள்







## கலை வளர்ச்சி

செல்வந்தர் ஒருவருக்கு
பெண் குழந்தை பிறந்தது!
பரதநாட்டிய
அரங்கேற்றத்துக்கு
தேதி குறித்துக்கொண்டு
சபாக்காரர் வெளியே வந்தார்!

— மதிவண்ணன்



## "பேன்"

கண்களின் செவன்ட்டி எம்.எம். விரிவைக்
கன்னங்களின் ரோஸ் பவுடரினூடே
கண்டு கொண்டு,
தோள்களின் இருபது டிகிரி சாய்மானத்தின்
வழு வழுப்பிலிருந்து
லஞ்ச் இண்டர்வெல்லின் ஒரு சதுர அடிப்
பனிப் பரப்பில் சரிவதற்காய்க்
காதோரம் சுழலும் முடியின்
லெமன் ஷாம்பு மணத்தில் மயங்கி
உயிரைத் தொங்கவிடுகிறேன் :
புதுப் பழக்கம் !
பனிப் பரப்பின் சறுக்கலில்
பாதாளத்தில்
வி
ழு
கி
றே
ன்;
நியூட்ரல் பாலிஷ் நகங்களின் கீழே
தூசியாய் மிதித்துச் செல்கின்றானே....
ஓ !
அந்தப் பெல்பாட்டத்தின் ஒரு வினாடி நிழல்--
போதும் !

— "மராஜ்"

## இண்டர்வியூ

தமிழக அரசு
செய்திப் படத்தில்
கலைஞருக்கு
விழுகின்ற மாலைகளைக்
கவனமாக எண்ணுகிறான்,
என் நண்பன்.
நாளைக் கவனுக்கு
'இண்டர்வியூ'வாம்!

— நிமலன்



# புதுக் கவிதை



## நாங்கள் அசடுகள் அல்ல!

அகலிகை அழகிதான்
அற்புதமான அழகி
அவள் என்ன செய்தாள்?
அழகை மூடி மூடி வைத்தாள்
அப்பாவி இந்திரனின்
ஆசையை வளர்த்தாள்
ஆசைத் தீ
காமவேள்விக்கு ஒளிகாட்டியது
அகலிகையின் கற்பும்
இந்திரனின் புகழும் ஆகுதியாயின.
ஆண்மகன் இந்திரன்
சேவலாய்க் கூவினான்
பூனையாய் ஓடினான்
அகலிகை கல்லானாள்
இந்திரன் 'கண்ணாயிரம்' ஆனான்.
பாவம்! பாவம்!
இவ்வளவும் எதனால்?
அசட்டு அகலிகை
அழகை மூடி மூடி வைத்து
மன்னவன் இந்திரன்
மனத்தை மயக்கியதால்!
நாங்கள் அசடுகள் அல்ல.
ஆண்களின் ஆசையைத் தூண்டி
கற்பையும் விட்டுக்
கல்லாக நின்று
இராமன் காலையும் இடறமாட்டோம்.
மூடிவைத்தால் மர்மம்!
மூடுவானேன்?
நாங்கள் லோகட் ஜாக்கெட்
ஸீத்ரு ப்ளவுஸ்
மினிஸ்கர்ட், மினிமினி ஸ்கர்ட்
இவைதாம் அணிவோம்.
எந்த ஆண்மகன் ஆசைப்படுவான்?
கற்புக்கும் காவல்
இராமன் காலுக்கும் காவல்!

— இரா. மோகன்

## பாவம் யார் தலையில்?

நானொரு காண்ட்ராக்டர்
நாலு பேரிடம் பழகும்போது
நானொரு கேரக்டர் ஆக்டர்
ஆற்றிலொரு பாலம்
அவசரமாய்க் கட்ட
அரசு கோரியது டெண்டர்
அடியேனும் போட்டேன்.
வேலை எனக்காக,
'வேண்டியது' என்னவென்றேன்.
வாரியத் தலைவர்
வாங்கமாட்டார் பைசா
வீடு 'ஒன்று மட்டும்' போதுமாம்.
'உம்' என்றேன்.
மேல்நிலைப் பொறியாளர் முதல்
கடைநிலை ஊழியர்வரை
'கடாட்சிக்க' வேண்டுமாம்.
'ஊம்' என்றேன்.
வேலை தொடங்கியது
'விரும்பியபடி' நடந்தது.
பில்லைப் 'பாசா'க்கப்
பல்லைக் காட்டுகிறார்.
தள்ளியது போதாதென்று
தவணையைப் பிடிக்கிறார்.
'ஊம்' என்றேன்.
இனி நானும் பிழைக்க வேண்டாமா?
இலட்சம் போட்டேனே முதலாக.
இலட்சணம் இப்படியிருக்க
நாலுக்கொரு சிமெண்ட்
நாற்பதற்கொன்றாகாதா?
பின்னால்
பாலம் இடிந்தால்
பாவம் யார் தலையில்?

— தேசாந்திரி





## முயலே, தூங்கு!

நள்ளிரவில் கண்விழிக்கும்
நான் இருடனில்லை
நாளெல்லாம் உழைத்தாலும்
நாலு மணித் தூக்கம்
துள்ளிஎழும் நிலைபின்பு
தொடரும்இனிச் சிந்தை
தொலையாத கடன் தொல்லை
தீர்க்க வழி என்ன?
மொத்த விலை மலிவானால்
நமக்கென்ன நாம் வாங்கும்
சொந்தைசொன்னே விலையெல்லாம்
கணக்கிலன்றோ ஏறும்!
நத்தை நடை வருமானம்
முயல்வேகச் செலவினங்கள்
முயல் தூங்கும் கதை வாழ்வில்
ஒருமுறையும் நடவாதா?

—'பரதேசி'

# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி



## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் துணிகள், ஸ்டேபிள் இழை, ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லாவற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய நாளிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில் மற்றும் இதர கெட்டி மரங்களிலிருந்து கரை திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகியவற்றுக்கான நுட்பநவீனமான எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான் முன்னோடியாக விளங்குவதனால், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழியமைந்துள்ளது.

இன்று, குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. மரக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது செல்லுலோஸ் இழையளவிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ளதோடு, அதே காலத்தில் ரூ. 360 கோடி அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது: இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

**குவாலியர் ரேயான்—**
**தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்.**

தி குவாலியர் ரேயான் ஸில்க் மானுபாக் (வீவிங்.) கோ. லிட்., பிர்லாகிராம், நாக்தா (ம.பி.)

Sobhagya GR 74-2-Tam.

# மேல்நாட்டு மருமகள்

மேல் நாட்டிலிருந்து படிப்பு முடிந்து திரும்பும் மகன் மோகனை வரவேற்கச் சென்ற பெற்றோருக்கு ஓர் அதிர்ச்சி காத்திருக்கிறது. மகன் மட்டும் வரவில்லை; அவனுடன் மேல் நாட்டு மருமகளும் விமானத்திலிருந்து இறங்குகிறாள்! அதிர்ச்சி பெற்றோருக்கு மட்டுமல்ல, அவனுடைய தமிழ் நாட்டுக் காதலி சுதாவுக்கும்தான்.

மேல் நாட்டு மருமகள் பாரதப் பண்பாடுகளின் மேன்மைகளைச் சொற்பொழிவு பாணியில் விளக்குவதையும் தமிழ்நாட்டு நங்கைகூட அறிந்திராத பாரதப் பண்பாடுகளை மேற்கோள்களுடன் விரித்துரைப்பதையும் தமாஷாக எடுத்துக்கொள்ள வேண்டியதுதான்!

மோகனாக வரும் சிவகுமார் தம் பாத்திரத்தை உணர்ந்து நடித்திருக்கிறார். அவர் தம்பியாக வரும் கமலஹாஸனின் நடிப்பு இளந்தலைமுறையினருக்குத் திருப்தியளிப்பதாயிருக்கிறது. அவருடன் இணைந்து நடிக்கும் ஜெயசுதா பாரதப் பண்பாடு எப்படியெல்லாம் இருக்கக் கூடாது என்று எடுத்துக் காட்டவே வருகிறார். கவர்ச்சிக்குக் கேட்க வேண்டுமா?

மோகனின் அப்பாவாகப் பூரணம் விசுவநாதன் வருகிறார். மிகவும் அமைதியான, இயல்பான நடிப்பு. 'தமிழ்த் திரையுலக அப்பாக்கள்' யாராலும் அவரை அசைக்க முடியாது!

திரைக்கதையே மேல் நாட்டு மருமகளுக் காகத்தான்! ஃபிரான்சு தேசத்தைச் சேர்ந்த மிஸ் லாரன்ஸுக்குக் குரல் கொடுத்திருப்பது யாரோ தெரியவில்லை — மிகவும் செயற்கையாயிருக்கிறது. அது சரி, 'மேல் நாட்டு மருமகள்' என்றால் அப்படி ஓயாமல் பேசவேண்டுமா? சில இடங்களில் தமிழைக் கேலி செய்வது போல் இருக்கிறதே! ஆனால் மிஸ் லாரன்ஸின் பரத நாட்டியப் பயிற்சிக்கு ஒரு சபாஷ் போட வேண்டியதுதான்!

மனத்தில் இடம் பெறாத ஆறு பாடல்கள் இருக்கின்றன. இருந்துவிட்டுப் போகட்டும். நமக்கென்ன என்று விட்டுவிட முடியுமா? கேட்டுத் தொலைக்க வேண்டியிருக்கிறதே! கவர்ச்சியான 'ட்யூனில்' பாடல் அமைக்க முடியவில்லையென்றால் தயாரிப்பாளர் அதைக் கட்டிக்கொண்டு அழுவானேன்!

ஈஸ்ட்மென் கலரில் தயாரிக்கப்பட்டிருக்கும் இப்படத்தின் ஒளிப்பதிவு ரொம்பச் சுமார்.

மூலக் கதை, திரைக்கதை, வசனம், டைரக்ஷன் அனைத்தின் பொறுப்பையும் ஏற்றிருப்பவர் பிரசித்தி பெற்ற டைரக்டர் ஏ. பி. நாகராஜன்!

பாரதப் பண்புகளை விளக்கும் ஓர் உபதேசப் படம்— ''மேல் நாட்டு மருமகள்.''

—காந்தன்



எதிர் வீட்டில் அவர்கள் குடி புகுந்த அன்றே என் பெரிய குமாரனின் முகம் களை கட்டி விட்டதைக் கவனித்தேன். அதிக அக்கறையாகப் படிப்பதையும், சுறுசுறுப்பாக அங்கும் இங்கும் உலாவுவதையும், அடிக்கொரு முறை கண்ணாடி முன் நின்று தலையை இழைய இழைய வாரிக் கொள்வதையும் கவனிக்காதது மாதிரி கவனித்துக் கொண்டு தான் வருகிறேன்.

எதிர் வீட்டில் உள்ளவர் கார், ஸ்கூட்டர் எல்லாம் தடபுடலாக வைத்திருந்ததால் என் மதிப்பிலும் அவர் உயர்ந்தே நின்றார். அது மட்டுமா? அந்த வீட்டில் பெண் இந்தப் பெண் ஒன்றுதான். மற்ற நாலும் பையன்கள். ஆகவே என் கற்பனை மகனது கற்பனையை முந்திக்கொண்டு வளர்ந்தது.

என் கற்பனையைச் சும்மா வளர விடவில்லை. காரியத்தில் சுறுசுறுப்பாக இறங்கினேன். மெள்ள மெள்ள எதிர் வீட்டாரைச் சிநேகப் படுத்திக் கொண்டு நெருங்கிப் பழகவும் தொடங்கினேன். ஒரு சுபதினத்தில் அந்தப் பெண் ஹேமாவின் கல்யாணப் பேச்சையும் நானே தொடங்கி வைத்தேன்.

''ஆமாம், கல்யாணம் பண்ண வேண்டியது தான் சார், தினம் என் மனைவி நச்சரித்துக் கொண்டுதான் இருக்கிறாள். உங்கள் பையனைக்கூடப் பார்க்கலாம் என்கிறாள்; உங்கள் அந்தஸ்தென்ன, இது நடக்கக் கூடிய காரி



யமா, சார்! அந்தப் பெண்ணிடத்திலே அவனுக்கு அத்தனை ஆசை'' என்று அவர் நிறுத்தினார்.

''என்ன சார் பெரிய அந்தஸ்து? நீங்கள் என்ன என்னைவிட அந்தஸ்தில் குறைந்து விட்டீர்கள்? எடுங்கள் பெண்ணின் ஜாதகத்தை'' என்று நான் பரபரப்புடன் பேசினேன். என்னைத் தூக்கி வைத்துப் பேசும் அவரைச் சம்பந்தியாக அடைவதில் மனத்துள் ஆனந்தம் துள்ளியது.

ஆனாலும் அவர் முகத்தில் உற்சாகமில்லை.

''சார்! நீங்கள் ஏதோ தவறாக நினைக்கிறீர்கள் என்று தெரிகிறது. அந்தப் பெண் உற்றார் யாருமற்ற ஓர் ஏழைப் பெண்;

யில் இருக்கப் பிடிக்காமல் இங்கு வந்து பிராக்டிஸைத் தொடங்கியிருக்கிறாள். சிரித்த முகம்; நல்ல சுறுசுறுப்பு. ஆனா ஆண் பிள்ளைகளுக்குப் பார்க்க மாட்டாளாம். இப்படியா நல்ல கூட்டம்...'' என்று இப்படி ஓயாமல் தங்கம்தான் ஏதாவது சொல்லிக் கொண்டே இருந்தாள். நான் எதையும் கவனிப்பதே இல்லை. அப்படியிருந்தும், அந்த டாக்டரின் தகப்பனார் என்னைத் தேடிக் கொண்டு வந்து விட்டார்.

''இந்த வட்டாரத்திலே சிரித்த முகத்துடன் பழகியும், உதவி செய்தும் வருகிற கலகலப்பான மனிதராமே நீர்! என்னை மட்டும் இப்படிப் பராமுகம் செய்யலாமா?'' என்று கேட்டபடி நுழைந்த அந்த வயதானவரைக் கண்டதும் எனக்குச் சற்று வேதனையாக இருந்தது. அதுவே அவரிடம் தனி அனுதாபம் கொள்ளவும் ஏதுவாயிற்று. என் மனக் கசப்பை ஒதுக்கிக் கொண்டு அவரை வரவேற்றேன். பிறகு கேட்க வேண்டுமா? என் ஓய்வு நேரத்தை அந்தப் பெரியவர் ஆக்கிரமித்துக் கொண்டு விடுவார்.

# வானவில்லின் வர்ணஜாலம்

கிரிஜா

வேலைக்காக நாங்கள் வீட்டோடு வைத்துக்கொண்டுள்ளோம்'' என்று அவர் சொன்னதும் என் உற்சாகம் சூரியனைக் கண்ட பனித் துளியாய்க் கரைந்து விட்டது.

இதைச் சாடை மாடையாக என் பையனிடம் சொல்லியும் அவன் கவனித்ததாகத் தெரியவில்லை. அந்தப் பெண், குழந்தைகளை நர்சரியிலிருந்து அழைத்து வரப் புறப்படும் போதுதான், இவனும் ஒரு பையனைப் பார்த்துப் புத்தகம் வாங்கி வருகிறேன் என்று கிளம்புகிறான்.

''இதைப் பாருங்கண்ணு! எதிர்ச்சாரி மூன்றாவது வீட்டில் ஒரு லேடி டாக்டர் குடி வந்திருக்கா... சின்னப் பெண்... அம்மா இல்லையாம். அப்பாவும் பெண்ணும்தான்; ''ஹௌஸ் சர்ஜனை'' முடித்தவள் சென்னை

பள்ளி ஆசிரியர் பணியைச் செய்து வந்த அவருக்கு மூன்று பெண்கள்; ரொம்பச் சிரமப்பட்டு இரண்டு பெண்களுக்குக் கல்யாணம் செய்து கொடுத்து விட்டார். மூன்றாவதுபெண் பத்மினி நன்றாகப் படித்து, உபகாரச் சம்பளம் பெற்று வந்ததால் அவளை டாக்டருக்கே படிக்க வைத்து விட்டார். ஓய்வு பெற்றுவிட்ட அவருக்குக் கவலையெல்லாம் இந்தப் பெண் பத்மினிக்கும் ஒரு கல்யாணத்தைச் செய்துவிடணும் என்பது ஒன்று தான்.

சட்டென்று என் அறிவு சுறுசுறுப்படைந்தது. ''ஏன் சார், நல்ல வசதியும், அழகும் உள்ள ஒரு பையன்; படிப்பில் மட்டும் உங்கள் பெண்ணுக்குச் சரிசமமாக இல்லாமல் இருக்கிறான்; அவனை மாப்பிள்ளையாக ஏற்றுக் கொள்வீரா?'' என்றேன் துணிவுடன். அலுப்பில் ஏற்பட்ட அசட்டுத் துணிச்சல்தான்.

கிழவர் நிதானித்தார். மெள்ள என்னை ஊடுருவிப் பார்த்தபடி, ''நானே கொஞ்சநாட்களாக அந்த முடிவில்தான் இருக்கிறேன். ஒரு பொருத்தமும் வேண்டாம்; மனப் பொருத்தம் இருந்தால் போதும் என்றுதான் இருக்கிறேன். அப்படி ஒரு பையன் இருந்தால் சொல்லி முடித்து வையுங்கள்; உங்கள் புண்ணியமாக இருக்கட்டும்'' என்றார்.

என் மகிழ்ச்சி துள்ளிக் கொண்டு கிளம்பி விட்டது. சுறுசுறுப்புடன் நிமிர்ந்து உட்கார்ந்தவன், பையன் என் பையன் தான் என்பதையும் சூசகமாக எடுத்துக் காட்டினேன். புரிந்து கொண்ட அவரும் உற்சாகமாகக் காரியப் பேச்சில் இறங்கினார்.





**எழுதி,
படம் போட்டு,
வெளியிட்டு ...**

விஷ்ணு சகஸ்ரநாமம் பற்றி விநோபா பாவே எழுதிய புத்தகத்தைச் சமீபத்தில் அவரே வெளியிட்டிருக்கிறார். புத்தகத்துக்குப் படங்கள் போட்டவரும் அவரே! டெக்கான் ஹெரால்டு—பாலி

---

நாளில் நாலு தரம் கிழவரைக் கண்டு பேசினேன். "எனக்குப் பெண் இல்லை என்ற குறை தீரக் கல்யாணப் பொறுப்பையே என்னிடம் விட்டுவிடுங்கள்" என்று அவருக்குத் தைரியம் கொடுத்து உற்சாகமூட்டினேன். அவரும் உற்சாகமாகப் பல திட்டங்களைச் சொல்லிக் கேட்டுக் கொண்டார். இப்படிப் பேசியபடி இருக்கும்போது, அந்த அறையுள் காரியமாகப் பத்மினி வருவாள். எங்கள் திட்டங்களைக் கேட்டுச் சிரித்தபடி திரும்புவாள். பத்மினி தங்கச் சிலையாக நிற்கவில்லை. நிலவாக ஒளிரவும் இல்லை. மாநிறம்தான். ஆடம்பரமற்ற எளிமையான அலங்காரம். அறிவுச் சுடர் விடும் அழகிய கண்கள், லட்சுமீகரம் சொட்டும் முகம்; பத்மினியிடம் எனக்கொரு பாசமே ஏற்பட்டு விட்டது.

"உங்கள் பையன் கண்ணனை பஸ் ஸ்டாண்டில் தினம் பார்ப்பாளாம் பத்மினி. 'ரொம்பக் கலகலப்பாக இருக்கிறார்; அப்பாவைப் போலவே பிள்ளையும் தங்கமானவர்' என்று புகழ்கிறாள்" என்று அவர் சொன்னதும், எனக்கு உற்சாகம் பிடிபடவில்லை.

"அப்ப முகூர்த்தம் பார்த்துவிடுவோமே" என்றேன்.

"பொறுங்கள்; அவசரப்படாதீர்கள்! நீங்கள் நினைப்பது போல் பத்மினி சுலபமான பெண் அல்ல; நல்ல அழுத்தமான மனம் கொண்டவள். இன்றுதான் விஷயம் முழுவதையும் கேட்டுக் கொண்டாள். யோசனை செய்து நாளை தன் முடிவைச் சொல்வதாகச் சொன்னாள்" என்றார்.

பத்மினியின் முடிவு எனக்கு உள்ளங்கை நெல்லிக் கனிதான். ஆகவே நானும் தங்கமும் திட்டங்களை வகுத்தபடி இரவை மிக உற்சாகமாகவே கழித்தோம்.

**ம**றுதினம் அதி உற்சாகமாகவே பத்மினியின் இல்லத்தில் நுழைந்தேன். என்னை அன்புடன் வரவேற்ற பெரியவர் தொண்டையைச் செருமிச் சரிசெய்து கொண்டார்.

"சார்! எனக்குச் சற்றுத் தயக்கமாகத்தான் இருக்கிறது. நான் சொல்லிப் பார்த்தேன். பத்மினி விஷயத்தைச் சிறிதும் விட்டுக்கொடுக்க இசையவில்லை. அவள் சொல்வதும் நியாயமாகத்தான் படுகிறது...." என்றதொரு பலமான பீடிகையுடன் ஆரம்பித்தவர், "சார்! பத்மினிக்குக் கார் வாங்கணும், ஒரு மருந்துக் கடை திறக்கணும் என்று ஆசை இருக்கிறதாம். இதைச் செய்த பிறகே கல்யாணம் என்பதைப் பற்றி நினைக்கணும் என்று இருந்தாளாம். நீங்கள், ரொம்ப அவசரப்படுவதால், ரூபாய் இருபத்தையாயிரம் ரொக்கமாகக் கையில் கொடுத்து விடணுமாம். பிறகு டாக்டர் என்ற அந்தஸ்துக்கு ஏற்பக் கல்யாணத்தையும் சிறப்பாகவே நீங்கள்தான் நடத்தணுமாம்... அடுத்து வரும் விசேஷங்களுக்கும்..." என் முகத்தைக் கண்டு கிழவர் நிறுத்திவிட்டார்.

பெண்ணை நானே தேடிப் போனதற்குச் சரியான தண்டனை! படித்த மமதையா? சே! எப்படி என்னை அவமதித்து விட்டாள்! விருட்டென்று எழுந்து வீட்டை நோக்கிப் புறப்பட்டு விட்டேன்.

என் வீட்டு வாயிலில் நுழைகையில் எதிர்ப்பட்ட பெண், எனக்காக வழி விட்டு ஒதுங்கி நின்றாள். பளிச்சென்று முழுமதி உதயமானது போல் ஓர் இதமான பிரகாசம்.

"அடே! ஹேமாவா? எங்கே வந்துவிட்டுப் போகிறாய்!" என்று கேட்டபடி நின்றும் விட்டேன்.

சட்டென்று நிமிர்ந்த ஹேமா தன் அகன்ற பெரிய விழிகளால் என்னைக் கூர்ந்து நோக்கினாள். அந்த அழகிய விழிகளில் கலக்கம் சிறு சிவப்பு.

"சும்மா மாமியைப் பார்த்துப் போகலாம் என்றுதான் வந்தேன். நான் வரட்டுமா மாமா?" என்றவள் கணமும் நிற்காமல் போய்விட்டாள்.

என்னைக் கண்டதும் தங்கம், "பெரியவர் என்ன சொன்னார்? எங்கே கல்யாணம்? எந்தத் தேதியில்? சீர் செனத்தி என்ன செய்கிறார்?" என்று கேள்விகளை அடுக்கினாள்.

அவளது கேள்விகளைக் காதுகள் ஏற்றுக் கொண்டிருந்தபோதே, என் மனமும் ஒரு திடமான முடிவுக்கு வந்து விட்டது.

"தங்கம், கல்யாணம் மிக எளிமையாகச் சுவாமிமலையில் நடக்கும்; நம் திட்டப்படி பத்தாம் தேதிதான்" என்று பதில் கொடுத்து விட்டேன்.

தங்கம் ஒரு பெருமூச்சுடன், "உம்; பாவம்: அந்தப் பெண் ஹேமா வந்தாள். நான் தடுத்தும் கேட்காமல் பரபரவென்று பாத்திரங்களைத் தேய்த்து, தண்ணீர் இழுத்து வந்து நிரப்பி, டிபனுக்கும் அரைத்துக் கரைத்து எத்தனை ஒத்தாசை செய்தாள்! இந்தப்பிள்ளை கண்ணனும், 'அம்மா! அம்மா!' என்று குழைந்தபடி சமையல் அறையை விட்டு நகரவில்லை. எனக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. கண்ணனுக்கு டிபனைக் கொடுத்து மாடிக்குப் போகச் செய்துவிட்டு, மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு, அந்தப் பெண்ணிடம் விஷயத்தை மிக நாசூக்காகக் கோடி காட்டினேன். அவ்வளவுதான், அந்தப் பெண் முகத்தை என்னால் பார்க்க முடியவில்லை. கலங்கிப் போன கண்களைத் தாழ்த்திக் கொண்டு, "மாமி! நான் ஏதாவது தவறாக நடந்து கொண்டிருந்தால் மன்னித்துக்கொள்ளுங்கள்" என்று சொன்னவள், டிபன்கூட எடுத்துக்கொள்ளாமல் புறப்பட்டு விட்டாள். நான் என்ன சொல்லியும் கேட்கவில்லை. எனக்கும் ஒன்றுமே ஓடவில்லை. ரொம்பப் பாவமாக வேதனையாக இருக்கிறது" என்று சொன்னவள் தன் கண்களைத் துடைத்துக்கொண்டாள்.

## 'ஆளப் பிறப்பானே, ஆறடி வளருவானே'...

## கருத்தரித்தவள் கனவு பலித்திடுமே

# கால்ஷியம்-ஸாண்டோஸ்

## இனிப்பினிலே!

கருவிலிருக்கும்போதே உங்கள் குழந்தையின் பற்களும் எலும்புகளும் அமையத் தொடங்கும். அப்போதுதான் அவனுக்குக் கால்ஷியம் மிகவும் தேவை. அளித்திட உங்களால்தான் முடியும். அதற்கு இலகுவான வழி: கால்ஷியம்-ஸாண்டோஸ்.




அன்றாடம் மும் முறை மென்றிடுங்கள் 3-4 வில்லைகள்; வைட்டமின்கள் C, D, $B_{12}$ அடங்கிய, இனிய ராஸ்ப்பெர்ரி-சுவையுள்ள கால்ஷியம்-ஸாண்டோஸ். வளரும் குழந்தையின் பற்களும் எலும்பும் வலுப்பெறும்; கால்ஷியம் குறைபாடுகளும், காலில் பிடிப்பும், தசை வலியும் வாராது குழந்தைக்கு.

நம்பிக்கைக்குரியோர் ஸாண்டோஸ்—
தூய கால்ஷியம் படைப்பதில்
உலக முன்னோடிகள்.






**கால்ஷியம் ஸாண்டோஸ்®**

**தினமும் தேவை எவருக்கும்**

dCP/CS/9/Tam

''கவலைப்படாதே, தங்கம்! ஹேமாதான் இந்த வீட்டு நாட்டுப்பெண்! அவள் கல்யாணத்தைத்தான் வைகாசி பத்தாம் தேதி சுவாமி மலையில் நடத்திவிடலாம் என்று தீர்மானித்துள்ளேன்!'' என்று நான் சொன்னதும் துள்ளி எழுந்தாள் தங்கம். அவளுக்கு ஒரே ஆனந்தம்; ஆச்சரியம். பிறகுதான் விஷயத்தையும் சொன்னேன்.

''வலுவில் நாமே தேடிப் போனோம் என்பதற்காக அந்த அகம்பாவம் கொண்ட பத்மினி எப்படி மட்டம் தட்டிவிட்டாள் பார்த்தாயா தங்கம்! அவளை மட்டும் சும்மா விடக்கூடாது'' என்று நான் முணுமுணுப்பதைக் காதில் வாங்காத தங்கம், ''உம்; முகத்தை அலம்பிக்கொண்டு புறப்படுங்கள்! முதலில் ஹேமா வீட்டுக்குப் போய் விஷயத்தைச் சொல்லியாகணும்; பாவம், அந்தப் பெண்ணின் மனம் இதற்குள் ரொம்ப வேதனைப் பட்டிருக்கும்'' என்று சொல்லிக்கொண்டே புறப்பட்டும் விட்டாள்.

நானும், எதிர் வீட்டு விசுவநாதனும் போட்டி போட்டுக் கொண்டு கண்ணன்—ஹேமா காதல் கல்யாணத்தை மிகச் சிறப்பாக, சுவாமிமலையில் சுவாமிநாதன் முன்னிலையில் நடத்தி விட்டோம். டாக்டர் பத்மினிக்கு இருவருமே முகத்தில் அடித்தமாதிரி பத்திரிகை கொடுத்திருந்தோம். 'கல்யாணத்துக்கு வரமாட்டாள்' என்ற என் நினைப்புக்கு மாறாகத் தன் தகப்பனாரையும் அழைத்துக் கொண்டு வந்தவள், கண்ணன்—ஹேமாவைக் கேலியும் கிண்டலும் செய்து கொண்டு மிக உற்சாகமாகவே கல்யாணத்தில் கலந்து கொண்டாள்! இது எனக்குப் பெரும் அதிர்ச்சியாக, புரியாத புதிராகவே இருந்தது.

தொடர்ந்து ஏற்பட்ட மன அதிர்ச்சிகளாலும், கல்யாணக் காரியங்களாலும் துவண்டுவிட்ட எனக்குக் கடுமையான ஜுரம் வந்து படுக்கையில் கிடத்தி விட்டது. ஜுரம் குறைந்து நான் நல்ல நினைவுடன் கண் திறந்த போது, பத்மினிதான் என் கையில் ஊசி போட்டுக் கொண்டிருந்தாள். எனக்கு எரிச்சலாக இருந்தது. கைகளைக் கழுவிக் கொண்டு வந்து நின்றவள், ''இப்போ தலைவலி குறைந்திருக்குமே? ஏதாவது சாப்பிடுகிறீர்களா?'' என்றாள் ரொம்பக் கரிசனமாக.

எனக்குப் பதில் அளிக்கத் தோன்றவில்லை. அவளிடம் இருந்த கோபம்தான் காரணம்.

'களுக்'கென்று கன்னம் குழையச் சிரித்தவள், ''உங்கள் கோபம் இன்னும் தணிந்தபாடில்லையா? சரி ஆகாரத்தைச் சாப்பிட்டுவிட்டு விஷயத்தைக் கேளுங்கள்; பிறகு உங்கள் கோபம் தணிந்து விடும்'' என்றபடி ஹார்லிக்ஸைக் கலக்கி என்னிடம் கொடுத்தாள்.

வாய்க் கசப்பும், மனக் கசப்பும் தீராமலே ஹார்லிக்ஸை வாங்கி விழுங்கி வைத்தேன். 'ஏதோ தொண்டிச் சாக்கு சொல்லப் போகிறாள்' என்ற அசிரத்தையுடன் கதையைக் கேட்கத் தொடங்கினேன்.

''...என்னோடு மெடிக்கல் காலேஜில் படித்த ஏழைப் பையன் ரகுவை நான் நேசித்தேன்; அவரும் என்மீது அன்பு கொண்டார்; ஹௌஸ் சர்ஜன் வரை வெற்றியுடன் படிப்


வீணாக்காதே !

பைத் தொடர்ந்து முடித்தவர், வெளிநாடு சென்று படித்து வரக் கிடைத்த அரிய சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ளப் போதுமான பணமின்றித் தவித்தார். என்னாலும் முடியாத நிலை என் மனத்தை ரொம்பவும் வேதனைப்படுத்தியது. அந்தச் சமயம் பல லட்சாதிபதிகள் ரகுவை மாப்பிள்ளையாக்கிக் கொண்டு அவரை வெளிநாடு அனுப்பத் தயாராக முன் வந்தார்கள். ரகுவின் தந்தை அவரை வற்புறுத்தினார். என் ரகு மனம் மாறினார். ''பத்மினி! நம் நட்பு இருக்கட்டும்; மற்ற மனக்கோட்டைகளை மறந்து விடுவோம்! வாழ்க்கையில் ஏற்படுகிற அதிர்ஷ்டத்துக்கு ஏற்ப நாமும் நம் மனத்தை மாற்றிக்கொள்ளத்தான் வேண்டும்'' என்றவர், என் அதிர்ஷ்டத்தை முறித்துவிட்டுத் தம் அதிர்ஷ்டத்தை ஏற்றுப் போய்விட்டார். 'பெண் மனத்தை மாற்றிக்கொள்ள முடியாது' என்பதை அவர் நினைக்கவே இல்லை. அந்த ஆசாபங்கத்திலும் வெறுப்பிலும் மனம் நொந்தவள், ஆண்களுக்கு எதுவும் ஒத்தாசை செய்ய விரும்பவில்லை. அவ்வளவே. இங்கு வந்து எல்லாவற்றையும் மறக்க முயன்றவளுக்குக் கண்ணன்-ஹேமாவின் காதல் பல இடங்களிலும் கண்ணில் படவே, 'பாவம், ஏழைப் பெண் ஹேமாவின் கதியும்...'என்று அங்கலாய்ப்பு ஏற்பட்டு மனம் குமைந்தது. நான் பயந்தபடியே நீங்கள் என்னைப் பெண் கேட்டு வந்ததும் திடுக்கிட்டேன். எப்படியும் இந்தக் காதல் ஜோடியைச் சேர்த்து வைத்தே தீருவது என்று மனத்துக்குள் திட்டமிட்டுத்தான் கார், மருந்துக்கடை என்ற நாடகம் போட்டேன். அது பலிக்காவிடில் உங்களிடம் நேரில் விஷயத்தைச் சொல்லிப் பார்ப்பது என்றும் இருந்தேன். ஆனால் என் அதிர்ச்சி நாடகமே அவர்களைச் சேர்த்து வைத்துவிட்டதில் மனம் நிறைந்து விட்டது. உங்களை ஏமாற்றிய குற்ற உணர்வைப் போக்க, பெண் வேண்டும் என்ற உங்கள் தாபத்தைத் தீர்க்க உங்களுக்கும் பெண்ணாகவே நான் இனி இருப்பேன்...'' என்று முடித்து, ''சித்தப்பா!'' என அன்புடன் என்னை அழைத்து நிறுத்தினாள் டாக்டர் பத்மினி.

மனம் நெகிழக் கண்களில் பொங்கிய நீரைத் துடைத்துக் கொண்டேன். 'வானவில்லின் வர்ண ஜாலம் போல மின்னிக் குளிர்விக்கும் பெண்களின் மனம்தான் எத்தனை விசித்திரம் நிரம்பியது!' என்று வியந்தேன்.

# மலரும் பூவைப் பிள்ளை வளர்ந்திடப் பலமான துணை—

# இன்க்ரிமின்*

பட்டுப் போன்ற பாப்பாவின் வளர்ச்சியிலே—முதலிரண்டு ஆண்டுகள்...மொட்டு விரியும் நேரம்—சிட்டுப்போல் பறக்க சிறகு முளைக்கும் பருவம்—இந்த முக்கியமான பருவத்திலே உங்கள் கண்மணிக்குக் கட்டாயம் தேவை—இன்க்ரிமின். பின்னர் பாருங்களேன் அவன் வளர்ச்சியை! பசித்துப் புசிப்பான்...உண்ணும் உணவெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக மாறும். நலம் தரும் வைட்டமின்களோடு, உங்கள் மகனின் வளர்ச்சிக்கு மிக மிக அத்தியாவசியமான அமினோ அமிலம், லைஸின் யாவும் நிறைந்தது இன்க்ரிமின்.




டிராப்ஸ்—2 மாதங்கள் முதல் 2 வயது வரையில்
சிரப்—14 வயது வரையில்

# இன்க்ரிமின்* டானிக்

## உணவையெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக்கும்
## உங்கள் பிள்ளை பூவாய் மலர்ந்து சிரிக்கும்!

டாக்டர்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமான பெயர்—(Lederle) ஸயனமிட் இந்தியா லிமிடெடின் ஒரு பிரிவு

*அமெரிக்கன் ஸயனமிட் கம்பெனியின் ரெஜிஸ்டர்டு டிரேடு மார்க்

# சகிப்புத் தன்மை

தற்கொலை பற்றிய செய்திகள் பத்திரிகைகளில் சர்வ சாதாரணமாக வந்து கொண்டிருக்கின்றன.

துன்பங்களைத் தாங்க முடியாமல் இந்த அளவுக்கு வருகின்றவர்கள் பலர்.

தற்கொலை பற்றி முடிவு செய்ய எவ்வளவு துணிச்சல் வேண்டும்?

அந்தத் துணிச்சலை மூலதனமாகக் கொண்டு வாழ்வதற்கு ஏன் முயற்சி செய்யக் கூடாது?

சகிப்புத் தன்மை என்பது எல்லோருக்கும் வந்துவிடுவதில்லை.

''ஐயோ! என்னால் தாங்க முடியவில்லையே?'' என்ற அலறல் ஒவ்வோர் உள்ளத்திலும் கேட்கிறது. சிரித்துக் கொண்டே அவற்றைச் சகித்துக் கொள்ளும் பழக்கம், சிலருக்கு மட்டுமே வாய்க்கிறது.

காலையில் கண் விழித்ததிலிருந்து, இரவு படுக்கைக்குப் போகும் வரை துன்பங்களையே சந்திப்பவர்கள் உண்டு. இதில் சகிப்புத் தன்மையை எப்படி வரவழைப்பது?

மனம் மரத்துப் போய்விட வேண்டும்; உணர்ச்சிகளைக் கொன்றுவிட வேண்டும்; எந்த அடியையும் தாங்கும் உள்ளத்தைப் பெற்றுவிட வேண்டும்.

நாம் விரும்பிப் பிறக்காதது போலவே நடக்கும் காரியங்களும் நாம் விரும்பி நடப்பவையல்ல.

கோடானு கோடி மக்களுக்கு நடுவிலே—இல்லை, கோடானு கோடி குணங்களுக்கு நடுவிலே நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம்.

'எல்லாம் நிறைந்ததுதான் உலகம்' என்று கண்டு கொண்டு விட்டால், சகிப்புத் தன்மை வந்துவிடும்.

## கடைசிப் பக்கம்



## கண்ணதாசன்

'ஒன்று நடந்துதான் தீரும் என்றால், அதிலே கவலைப்படுவதற்கு என்ன இருக்கிறது' என்றான் மராட்டிய ஆசிரியன் காட்கரி.

இதனைத்தான் 'விதி' என்று இந்து மதம் சொல்கிறது.

எனது தாயார் மரணப் படுக்கையில் இருந்தபோது சென்னையின் மிகப் பெரிய லேடி டாக்டர் வந்து பார்த்தார். அப்போது மாலை மணி ஆறு.

என்னை அவர் தனியாகக் கூப்பிட்டு, ''இரவு பன்னிரண்டு மணிக்கு உயிர் போய்விடும்'' என்றார்.

அப்போது என் தாயார் நன்றாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

ஆறு மணி நேரம் நான் மரணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.

அப்போது என் நிலை எப்படி இருந்திருக்கும்? நடந்தே தீரப் போகிற ஒன்றுக்காக நாம் ஏன் அழ வேண்டும்?

ஏமாற்றம், தோல்வி, நடுக்கம், எரிச்சலூட்டும் சூழ்நிலை, இரக்கமற்ற மனிதர்கள் இவற்றுக்கு நடுவே ஒரு மனிதன் வாழ முயற்சிசெய்கிறான்; வாழ்ந்தே ஆக வேண்டும் என்று தீர்மானிக்கிறான்; வாழ்ந்துவிடுவோம் என்று துணிகிறான்; அவனுக்குச் சகிப்புத் தன்மை வந்து விடுகிறது.

பிறக்கும் போது வாழ்க்கைக்கென்று ஒரு நோக்கமில்லை; பிறந்த பிற்பாடு அமைகின்ற சூழ்நிலை ஒரு நோக்கத்தைத் தோற்றுவித்து விடுகிறது. இதற்கு முக்கிய தேவை சகிப்புத் தன்மை.

இப்பொழுதெல்லாம் சகிப்புத் தன்மையை வரவழைப்பதற்கு மாத்திரைகளே வந்து விட்டன!

ஒரே மாதிரி வாழ்வில் எரிச்சலடைந்து மேல் நாட்டு மனிதர்கள் சீரழிந்த வாழ்க்கையைத் தொடங்கிவிட்டார்கள். ஆனால், வாழ்க்கைக்கு அது வழியாகாது.

நிரந்தரமானது துன்பம்; வந்து போவது இன்பம்; இதுதான் வாழ்க்கை என்பதைத் தெளிவாகக் கண்டு கொண்டுவிட வேண்டும்.

தைரியத்திலும், நம்பிக்கையிலும் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும்.

எனக்கு ஏற்பட்ட சித்திரவதைகள் கொஞ்ச நஞ்சமல்ல.

இரக்க குணத்தாலேயே அழிந்தவன் நான்.

சகித்துக் கொள்ளப் பழகினேன்; இன்னும் பழகிக் கொண்டுதான் இருக்கிறேன்!

அழுவதால் பிரச்னை தீருமென்றால், நான் அழத் தயார். ஆனால் ஆறுதலுக்காகப் பல நேரங்களில் அழுவதுண்டு! முடிவில் ஒரு நம்பிக்கையை வரவழைத்துக் கொள்வேன்.

எவ்வளவு பெரிய தத்துவங்களைப் பேசுகிறவனுக்கும் நம்பிக்கையும், அவநம்பிக்கையும் மாறி மாறி வருகின்றன.

அவநம்பிக்கையைக் குறைப்பது அல்லது போக்கடிப்பது சகிப்புத் தன்மையே.

சகிப்புத் தன்மையின் மூலம் அனுபவங்கள் சேகரிக்கப்படுகின்றன.

அளவுகடந்த துன்பங்களை அனுபவித்தவன் தன் வாழ்க்கை வரலாற்றை உள்ளது உள்ளபடி எழுதினால் உலகமே பயங்கரமாகக் காட்சி அளிக்கும்.

மேல் கிளையிலே நாகம்; கீழே வேங்கை; நடுக் கிளையைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருப்பதுதான் வாழ்க்கை.

கை வலிக்கும், சகித்துக் கொள்ளுங்கள். நேரம் ஆக ஆக வேங்கை விடைபெற்றுக் கொள்ளும்.

சகிப்புத் தன்மையின் இறுதி மகிழ்ச்சிகரமான வெற்றியாக இருக்கும்!

காட்கரியின் பொன்மொழியையே மீண்டும் நினைவுபடுத்துகிறேன்.

''ஒன்று நடந்துதான் தீரும் என்றால் அதில் கவலைப்படுவதற்கு என்ன இருக்கிறது?''

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

# ஒயிலுக்கு எழில்சேர்ப்பது



MONSIEUR
டெரீன்-காட்டன் ஸூட்டிங்ஸ்

DAVARIN
டெரீன்-காட்டன் ஷர்ட்டிங்ஸ்

ravikunj
வாஷ் அண்ட் வியர் பாப்ளின்கள்

DAVANJOY
டெரீன்-காட்டன் ஷர்ட்டிங்ஸ்

## தாவண்கெரே

நவநாகரிகத் துணிமணிகள்
தி தாவண்கெரே காட்டன் மில்ஸ் லிமிடெட்
தாவண்கெரே, கர்நாடகம்.

டெரீன்* கெமிக்கல்ஸ் அண்ட் ஃபைபர்ஸ் ஆஃப் இந்தியா லிமிடெட்
அவர்களின் ரெஜிஸ்டேர்ட் டிரேட்மார்க்

Thomas/DCM 18 a tam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

# a new paint for your building



Your home will look lovelier with **Spart-a-cem CEMENT PAINT**

**Spart-a-cem CEMENT PAINT** gives a durable and attractive finish on exterior and interior walls.

It is designed to give water resistance to the walls and would be ideal even in those regions where the monsoon is heavy.

With every shower, the dirt on the walls washes down, leaving the walls with a new appearance.

**Spart-a-cem CEMENT PAINT** gives a better finish at less cost.

## Spart-a-cem

**CEMENT PAINT**

*The Paint you can Trust*






**ADDISONS PAINTS & CHEMICALS LTD.,**
SEMBIAM, MADRAS-11